வெளியீடு எண். 626.

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்

( வரலாற்றுச் சித்திர விளக்கத்துடன் )




தருமை ஆதீனம்

2000

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

தருமை ஆதீனக் குருமுதல்வர்

# ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

விக்கிரமஞ் வைகாசிமீ 11உ

24---5---2000



தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக
பரமாசாரிய சுவாமிகள்

74-2

வெளியீடு எண். 626.

உ
குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்

( வரலாற்றுச் சித்திர விளக்கத்துடன் )

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள்

திருவுளப்பாங்கின்வண்ணம்

தருமை ஆதீனக் குருமுதல்வர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய
சுவாமிகள்

குருபூசை விழா மலராக

" ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் "

வெளியிடப்பெற்றது.

தருமை ஆதீனம்

24 - 5 — 2000

தருமை ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

# முன்னுரை

" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி "

என்பதுதிருக்குறள் இக்குறள்மெய்யுணர்தல்அதிகாரத்தில் திருவள்ளுவரால் கூறப்பெறுவது.

இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனானே மெய்ப் பொருளை உணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின் கண்ணே வாராத நெறியை எய்துவர் என்பது இத்திருக்குறளின் பொருளாகும். இக்குறள் அறிவுறுத்தும் உபதேச மொழி களாக விளங்கும் நூல்களுள் சிறந்து விளங்குவது தருமை ஆதீன ஆதிபரமாசாரியர் அருளிய எட்டு நூல்களின் தொகுப்பாக இலங்கும் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டக மாகும். மிக உயர்ந்த தத்துவ உண்மைகளை எளிய முறையில் உலகோர்க்கு உணர்த்தும் இந்நூல் தருமை ஆதீனப் பண்டார சாத்திரமாக விளங்கும் சிறப்பினது.

மெய்கண்ட நூல்களின் வழியேஞானசாத்திரங்களாக வந்த இந்நூலில் சொக்கநாத வெண்பா, சிவபோக சாரம், சொக்கநாதக்கலித்துறை, ஞானப்பிரகாசமாலை,

திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல், சோடசகலாப் பிராசாதசட்கம், முத்திநிச்சயம், நவரத்தினமாலை ஆகியன அடங்கியுள்ளன. தோத்திரமாகவும் சாத்திரமாகவும் அமைந்து விளங்கும் இந்நூல்கள் தருமை ஆதீனம் 23 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாட்சிக்காலம் தொடங்கி இன்று வரை தனித்தனி நூல்களாக ஆதீனச் சார்பில் வெளியிடப்பெற்றுவந்துள்ளன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருளாட்சிக் காலத்தில் இந்நூல்களின் தொகுப்பு ஸ்ரீகுருஞானசம்பந்தர் அட்டகம்என்றபெயரால் 1971 இல் குருபூஜை விழாமலராக வெளியிடப்பெற்றது.

தருமை ஆதீனம் இருபத்தாறாவது குருமாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அருளாட்சிக்காலத்தில் 1981 இல் இரண்டாம் பதிப்பாகவெளியிடப்பெற்றது. விக்கிரமஆண்டுவைகாசித் திங்கள் 11 ஆம் நாள் (24---5---2000) புதன்கிழமையன்று நிகழும் குருபூஜை விழா மலராக மூன்றாம் பதிப்பாக ஞானசம்பந்தம் பதிப்பக அறக்கட்டளையில் வெளியிடப் பெறுகிறது. அன்பர்கள் பலரும் பெற்று ஓதியுணர்ந்து பயன்பெறுவார்களாக.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
உத்தரவுப்படி

வித்துவான்
**மௌன மகாலிங்கத் தம்பிரான்.**

தருமை ஆதீனம்
22---5---2000

உ

சிவமயம்

# பொருளடக்கம்



ஸ்ரீ சொக்கலிங்கம் பூஜைமடம் தங்கக்கலச விமானம்.



சத்தியாய்ச் சிவமாம் தனிமுழு முதல்அருள்
சித்தி விநாயகன் திருவடி போற்றி.



பதிகயி லாயப் பரம்பரை நந்திக்குக்
கதிதரும் கல்லாற் கடவுள்உப தேசம்.



தாய்தந்தை சுற்றத்தார் தாலாட்டுப் பாட்டிசையால்
(செப் ற)ைபத் தொட்டிலிலே திருக்கண் வளரும்எழில்.



விண்பறந்து இறங்கிய மெய்ப் பரஞ்சோதி
நண்பமர் மெய்கண்ட நாதர்க்கு உபதேசம்.



பூவில்லிக்கு எட்டாத பூரண ஞானப்பிள்ளை
சீவில்லி புத்தூரில் சிறுதேர் உருட்டிடுதல்.



அன்னையும் பிதாவும் ஆலவாய் வழிபட
முன்னைத் தவப்புதல்வர் முன்செல்லப் பின்செல்லல்.



உயிர்தந்த அம்மையப்பர் உள்ளே இருந்தருள்வார்
உடல்தந்த உம்மைஇனி உளம்தொடராது என்றுஉரைத்தல்.



சொப்பனத்தினில் ஆரூரில் தூய சித்தீச்சரத்தில்
அப்பன் ஞானப்பிரகாசன் ஆசானுய் அருள்வான்என்றல்.



பொற்றா மரையின் பொலிந்தும் ஈசானத்தில்
உற்றோர் சிவலிங்கம் உறுகஎன இறைஅருளல்.



௬

இட்டெடுத்தார் போல்குளத்தின் ஈசானத்தே இறங்கிப்
பெட்டகத்தோடு உடையவரைப் பெற்றுஇன்பம் உற்றிடுதல்.



மூலமாய் எங்கும் முளைத்த சொக்கலிங்கேசா
ஆலவாயா குருவாய் அடியேற்கு அருள்என்றல்.



பொற்றுமரைக் கரையில் பூஜைபலர் செயக்கண்டு
கற்றுவின் மனம்போலக் கசிந்துருகி நின்றிடுதல்.



ஞானப்பிர காசரது நற்கனவில் சொக்கேசன்
ஞானசம்பந்தர்க்கு ஞானம் கொடுக்க எனல்.



கமலைச் சித்தீச்சரத்தில் சுதிஞானப் பிரகாசர்
அமல சிவஞானம் அருளும் பெருவண்மை.



உனக்குப் பணிசெய்ய உன்றனை எந்நாளும்
நினைக்க மனக்கவலை நீக்கி அருள் எனப்பணிதல்.



மெய்விளக் கியநல்லாசான் மேன்மைசால் சீடனுர்தாம்
கைவிளக்குஏந்திச் செல்லக் கைகாட்டி நிற்கஎன்னல்.



குருமொழிகொண்டு அகலாதும் கொடுமழையில் நனையாதும்
பெருமுனிவர் நின்றதிறம் பேருலகைப் புகழ்விக்கும்.



கருமத் தொடர்பற்ற கனபக்குவம் தெரிந்து
தருமபுரம் சேர்ந்து தனித்திருஎனக் குருமொழிதல்.



அருமைத் தமிழ்க்குருவாம் அகத்தியரை மிகத்தொழுது
தருமைத் தலத்தில் தவநிலையில் உளங்கொள்ளல்.



தில்லை நடராசன் திருநடங் கண்டு உய்ந்தருளும்
எல்லையிலா ஆனந்தம் எய்தும் பேரின்பநிலை.



திருவமுது பாயசம்நீர் தேவிசிவகாமி கொண்டு
வருவது அறியாது மாதவத்தில் வீற்றிருத்தல்.



எவ்வுயிரும் தம்திருமுன் எண்ணத்தும் பகையின்றிச்
செவ்விதின் இன்புற்றிருக்கத் தேசிகர்கோன் வீற்றிருத்தல்.



இத்தாரணி உய்ய எழில்தருமைக் குருமுதல்வர்
சுத்தாத்துவித சைவசித் தாந்த முத்திநிலை.



பரமானுர் ஆநந்த பரவசர்என்று எழுந்துவந்து
தரமான குருசச்சி தானந்தர்க்கு அருள்புரிதல்.



சச்சிதா நந்தமூர்த்தி ஞானசம் பந்தர்கோயில்
மெச்சிநற் பணிகள்ஆற்றி விண்ணுற விளங்கச்செய்தல்.



பரிபூரணம் அடையும் பக்குவத்தில் ஆநந்த
பரவசராம் பக்குவர்க்குப் பரஞானம் போதித்தல்.



குரு மாசிலாமணி குமர குருபரர்க்குப்
பெருஞானம் போதிக்கும் பேரருளின் சீரெழிலே.

உ
சிவமயம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

### குருமுதல்வர் வாழ்த்து

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரைஆள அவர்போல் வந்த
சைவசிகா மணி எவர்க்கும் தலைவன், எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்,
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணுள்ளன்,
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

**தோற்றுவாய் :**

தொண்டர் நாதனைத் தூதிடை விடுக்கும் அளவிற்கு இறைவனுக்கு என்றும் இனிதாய் இனிக்கும் மொழி தமிழ் மொழி. இத் தமிழ்கேட்கும் இச்சையால் இறைவன் திருவீழிமிழலையில் இருவர்க்கு நித்தலும் படிக்காசு நல்கினன். ஒருவர் பொருட்டு மதுரைமாநகரிற் குதிரை மாறினன். மற்றும் பலவும் செய்தருளினன். அதனல் இத் தமிழை, " ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத்தமிழ் " எனவும், " தண்ணர் தமிழ் " எனவும், " ஒண்தீந்தமிழ் " எனவும், மற்றும் பலவாறு உயர்ந்தோர் அனைவரும்

ஒருங்கே புகழ்ந்து போற்றினர். " இத்தமிழைக் கேட்டற் பொருட்டே சிவபிரான் திருக்கைலையினின்றும் தெற்கு நோக்கித் திருநடம்புரிந்து வந்து தென்னாட்டில் அமர்ந் தான்" என்றும் கூறுவர். எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய கடவுள் தென்னாடுடைய சிவனாய் நின்று காட்சியளிக்கும் திருக்கோயில்கள் தமிழகத்திலே எண்ணற்று விளங்கு கின்றன,

"வண்புகழ் மூவர் தண்புகழ் வரைப்பு" எனப் பண்டைக் காலத்தில் சொல்லப்பட்ட தமிழகம் பிற்காலத் தில் சேர, சோழ, பாண்டிய நாடு என்பவற்றுடன் நடு நாடு, தொண்டை நாடு, கொங்குநாடு என்ற பிரிவுகளையும் உடையதாயிற்று. இவ்வெல்லா நாட்டிலும் அருட் பேராசிரியர்கள் அவ்வப்பொழுது அவதாரம் செய்து. தமிழ்மொழியையேயன்றிச் சைவ சமயத்தையும் நன்கு பரிபாலித்துச் சென்றார்கள்.

நடுநாட்டிலே அவதரித்தருளிய திருநாவுக்கரசர் தொண்டை நாட்டைச் சிறப்பாக ஆண்ட பல்லவ மன்னனைச் சைவனாக்கினர். சோழநாட்டிலே அவதரித் தருளிய ஞானசம்பந்தர் பாண்டி நாட்டிற்கு எழுந்தருளி அந்நாட்டு மன்னனையும், மக்களையும் சைவர்களாக்கி எங்கும் திருநீற்றொளி தழைக்கச் செய்தார். அதற்கு முதற் காரணமாய் இருந்தவர்கள், சோழநாட்டு அரசன் மகளாராய்த் தோன்றி, அப்பாண்டிய மன்னனுக்குப் பட்டத்துத் தேவியாராய் இருந்த மங்கையர்க்கரசியாரும், அவருடன் சென்ற அமைச்சராகிய குலச்சிறையாரும் ஆவர். நடுநாட்டிலேஅவதரித்தருளிய சுந்தரர் சேரநாட்டு மன்னராகிய சேரமான் பெருமாள் நாயனாருக்குச் சிறந்த நண்பராய் அந்நாட்டிற்கு எழுந்தருளிச் சிறப்பாக வரவேற்புப் பெற்றுச்சைவசமயத்தின் தனிப்பெருமையை விளக்கியருளினர். அங்ஙனமே சேரமான்பெருமாள்

நாயனரும் தில்லை, திருவாரூர் முதலிய தலங்களுக்கு எழுந்தருளிச் சிவபிரானது பெருமையை விளக்கும் செந்தமிழ்ப் பாமாலைகளைப்பாடியருளினர். பாண்டிநாட்டில்அவதரித்து அமைச்சுரிமையும்பூண்ட மாணிக்கவாசகர் சோழநாட்டில் உள்ளதிருப்பெருந்துறையில் திருவருள்பெற்றுத்தில்லைக்கு எழுந்தருளிப் புத்தரை வாதில் வென்று, திருவாசகப் பகுதிகள் பலவற்றையும், திருக்கோவையாரையும் அருளிச் செய்தார். தொண்டை நாட்டில் தோன்றிய சேக்கிழார் சோழநாட்டு மன்னன் அநபாயனுக்கு அமைச்சராய், அவனைச்சிந்தாமணி முதலியஅவகதைகளில் ஈடுபடாமல், திருத்தொண்டர் வரலாருகிய தவ கதைகளில் ஈடுபடும்படி செய்து, தில்லையில் இருந்து உலகம் உய்யத் திருத்தொண்டர்புாரணம்பாடிஅரங்கேற்றியருளினர். இங்ஙனம் தமிழகத்தில் அருளாளர்கள் பலர் அவ்வப்பொழுது தோன்றி ஆங்காங்குச் சென்று அருள் ஒளி தழைக்கச் செய்தனர். அம்முறையில் பாண்டிய நாட்டில் அவதாரம் செய்து சோழநாட்டில் போந்து ஞானபீடம் அமைத்து அருள்ஞான ஒளியைப் பரப்பியவர், திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர்.

## திருவவதாரம் :

தமிழ்முனிவராகிய அகத்தியர் என்றும் இருந்து தவம் புரிவது, கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோடமர்ந்து தமிழ் ஆராய்ந்தது முதலிய பல பெருமைகளையுடையது பாண்டிநாடு. அந்நாட்டில், "ஸ்ரீவில்லிபுத்தூர்" என்பது ஒரு செல்வத் திருப்பதி. அதன்கண் கார்காத்த வேளாளர் குலத்தில் சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்து நின்று இல்லறம் நடாத்தியவர்கள் சுப்பிரமணியபிள்ளை என்பவரும், அவர்தம் வாழ்க்கைத் துணைவியாராகிய மீனட்சியம்மையாரும் ஆவர். இவர்களது சீரிய சிவவழிபாட்டின்

பயனுகச் சிவபெருமானது திருவருளால் இவர்கட்கு நன் முகூர்த்தம் கூடிய ஒரு சோமவார தினத்தில் நன்மைந்தர் ஒருவர் அவதரித்தருளினர். ஞானசம்பந்தராதியரது நல்லருள் வழியிலேநின்று ஞானத்திலேயே எப்பொழுதும் நாட்டம் கொண்ட அப்பெற்ருேர்கள். தம் மகனுர்க்கு, " ஞானசம்பந்தர் " என்றே பெயரிட்டு சாதகன்மம், சௌளம் முதலிய சடங்குகளைஎல்லாம் முறைப்படிசெய்து அருமையாக வளர்த்து, ஐந்தாவது ஆண்டில் கலைபயிலத் தொடங்குவித்தார்கள்.

ஞானசம்பந்தரும் முன்னைத் தொடர்பால் தமிழ்மொழி வடமொழியில் உள்ள இலக்கிய இலக்கண நூல்களை எல்லாம் எளிதில் உணர்வாராயினர். உரிய காலத்தில் சமய தீக்கை செய்விக்கப்பெற்று திருமுறைகளையும், ஆகமங்களையும் பதினுரும் ஆண்டிற்குள் நன்கு ஓதி யுணர்ந்து, கலைநிறை மதிபோல் திகழ்ந்து நல்லொழுக்கம், சிவபத்தி சிவனடியார் பத்திகளில் சிறந்துவிளங்கினுர். தம் மகனுரது கல்வியறிவையும், ஒழுக்கத்தையும் கண்ட பெற்ருேர்க்கு உண்டாகிய மகிழ்ச்சி அளவிடற்பாலதோ !

## அருள்நெறி கூடல்

ஞானசம்பந்தர் இங்ஙனம் வளர்ச்சியுற்றிருக்கும் நாளில்ஒருநாள் அவர் தம் பெற்ருேர், தங்கள்ஆன்மார்த்த மூர்த்தியாகிய மதுரைச் சொக்கலிங்கப்பெருமானை வணங் குதற் பொருட்டுத் தம் புதல்வருடன் மதுரைக்குச்சென்று, அங் கயற்கண் ணம்மையுடன் ஆலவாய்அப்பனை வணங்கி வழிபட்டுச், சின்னுள் அத்தலத்திலே தங்கியிருந்தனர். பின்னர், அவர்கள் தம் இருப்பிடத்திற்குத் திரும்பநினைத்த பொழுது ஞானசம்பந்தர், "அனைத்துயிர்க்கும் அம்மையும் அப்பனுமாவார்இவ்வாலயத்தின்கண்எழுந்தருளியிருக்க" இவர்களையன்றி யார், யாருக்கு என்ன உறவாவார் ? அயலோரால் நமக்கு ஆகவேண்டுவது யாது ? ஆதலின்,

என் உயிர்க்குத் தாய் தந்தையராய் உள்ள இவர்களை விட்டுப் பிரிய என் உள்ளம் ஒருப்படவில்லை; யான் இவ்வம்மையப்பரோடிருக்கும் பெருவாழ்வு பெற்று விட்டேன்; இப்பெருவாழ்வை எனக்கு அளித்த நீங்கள் இனி அமைதியோடு செல்லுங்கள் என்று கூற, தந்தையாரும், தாயாரும் அவரது ஞானநிலைக்கு மாறு சொல்லமாட்டாதவர்களாய் ஒருவாறு உள்ளம் தெளிந்து தங்கள் ஊர்க்குத் திரும்பினர்.

ஈன்று புறந்தந்த தாயையும், தந்தையையும் விடுத்து ஆலவாய் அண்ணலையும் அங்கயற்கண்ணியையுமே அப்பனும் அம்மையுமாக அடைந்து மகிழ்ந்த ஞான சம்பந்தர் அங்கு நாள்தோறும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிப் பெருமானையும், பெருமாட்டியையும் வழிபட்டு வந்தார். அவ்வாறு வரும் நாட்களில் பொற்றாமரைக் கரையில் நாள்தோறும் அடியார் சிலர் அமர்ந்து பூவும் நீரும் முதலாயின கொண்டு ஆன்மார்த்த சிவபூசைசெய்து ஆனந்தக் கண்ணீர் சொரியத் தோத்திரம் பாடிச் சூழ்ந்து பணிந்து பரவசம் உறுதலைக் கண்டு, தாமும் அங்ஙனமே பூசைசெய்யப் பெருவிருப்பங் கொண்டவராய் ஒருநாள், வாயானை, மனத்தானை, மனத்துள் நின்ற கருத்தானை, கருத்தறிந்து முடிப்பான் தன்னை வணங்கித் தம் கருத்தை முடித்தருளவேண்டி விண்ணப்பித்தார். அதனால் அன்று இரவு ஆலவாய் உறையும் அண்ணல் அவரது கனவில் தோன்றி, 'ஞானசம்பந்த' நாம் இலிங்கவடிவில் பொற்றாமரைப் பொய்கையில் ஈசானதிக்கில் பெட்டகத்து இருக்கின்றோம்; எடுத்துப் பூசிக்க என்று சொல்லி மறைந்தருளினர்.

**அற்புத நிகழ்ச்சி :**

விழித்தெழுந்த ஞானசம்பந்தர் வியப்புற்று அதிகாலையில் எழுந்து முறைப்படி பொற்றாமரைத் தீர்த்தத்தில்

நீராடி ஈசானதிக்கில் மூழ்கியபொழுது பெட்டகக் கோயிலோடும் சொக்கலிங்கப்பெருமான் அவரது கரத்தில் எழுந்தருள அதிசயித்துக் களிப்புமிக்கு ஆடிப்பாடித் திருமுன்பு சென்று பெருமானை வணங்கி,

" கண்ணுக் கினிய பொருளாகி யேஎன் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேஎன்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே "

என்பது முதலாகப் பதினொரு திருப்பாடல்களையுடைய "சொக்கநாதக் கலித்துறை பாடி" அடியேன் கருத்து முற்ற அருள்செய்தீர்; எனினும் உம்மைப் பூசிக்கும் முறையையும், அதற்கேற்ற ஞானத்தையும் தரும் ஞானசாரியரையும் காட்டியருள வேண்டும் என வேண்டிக் கொண்டு தம் இருக்கையிற் சென்றிருந்தார். அன்று இரவிலும் ஆலவாய் அழகர் அவரது கனவில்எழுந்தருளி, "ஞானசம்பந்தனே, நமது உபதேச பரம்பரையில் வந்து திருவாரூரின்கண் உள்ள ஞானப்பிரகாசனிடம் சென்று ஞானோபதேசம் பெற்று நம்மை வழிபட்டு வருவாயாக" என்று சொல்லி மறைந்து, திருவாரூரில் ஞானப்பிரகாச தேசிகரது கனவிலும் அங்ஙனமே ஆலவாய் அழகராய்க் காட்சியளித்து, 'நீ, வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வரும் நம் ஞானசம்பந்தனுக்கு முறைப்படி விசேட நிருவாண தீக்கைகள் செய்து ஞானோபதேசம் பண்ணி இலிங்கபூசையும் எழுந்தருளுவிப்பாயாக" என்றுஅருளிச் செய்து மறைந்தார்.

ஞானப்பிரகாச தேசிகர் சோமசுந்தரப் பெருமான் தமக்குக் கனவில்வந்து காட்சிதந்து கட்டளையிட்டருளிய கருணைப் பெருக்கை நினைந்து அன்புமீதூரப் பெற்று, ஆலவாய் அண்ணலைத் திசைநோக்கி வணங்கி மகிழ்ந்து

அவர் அருளிச்செய்த சோமவார தினத்தை எதிர்நோக்கி யிருந்து, அந்நாள்வந்தவுடன் பேரன்புடன் அதிகாலையில் எழுந்து முறைப்படி சென்று கமலாலயத் தீர்த்தத்தில் நீராடித் தமது நித்திய வழிபாடுகளைச் சிறப்பாக முடித்துப் பூங்கோயிலுக்குச் சென்று திருமூலட்டானேசுரரையும், தியாகராசப்பெருமானையும் அம்பிகையோடு கண்களிக்கக் கண்டு வணங்கி வலம் வந்து சித்தீச்சரத்தில் உள்ள தமது வழிபடு கடவுளாகிய ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சந்நிதியில் ஞானசம்பந்தர் வருகையை நோக்கிக் கிழக்கு முகமாக வீற்றிருந்தார்.

## குருநாதரைக் காணல் :

இஃது இவ்வாறாக, மதுரையில் ஞானசம்பந்தர் தமக்குக் கனவில் சோமசுந்தரப் பெருமான் இட்டருளிய கட்டளையை உணர்ந்து, துயில்விட்டெழுந்து உள்ளம் நெக்குருக, உரைகுழற, உடல்புளகிப்ப, கண்ணிர்மல்க, வைகறைப்போதிலே சென்று, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, நித்திய கன்மானுட்டானங்களை முடித்துக்கொண்டு ஆலவாய்ச் சொக்கனையும், அங்கயற்கண்ணியையும் வணங்கித் தமக்கு ஆசான்மூர்த்தியை அருளிச் செய்த கருணையை நினைந்து வாழ்த்தி, விடைபெற்றுக்கொண்டு திருவாரூர் நோக்கிப் புறப்பட்டு, வழியில் திருவானைக்கா முதலிய திருத்தலங்களை வணங்கிக்கொண்டு சோமவாரத் தன்று திருவாரூரை அடைந்தார். அன்று காலை அங்குக் கமலாலயத்தில் முழுகி நாளும் செய்யும் நன்னெறிச்செயல் களை முடித்துப் பூங்கோயில் புக்குப் புற்றிடங் கொண்ட நாதரையும், செம்பொன் தியாகரையும் பணிந்து, “குரு நாதரைக் காணும் பேறு எப்பொழுது எங்கே எவ்வாறு கிட்டுமோ” என எண்ணி ஏக்கமுறும் உள்ளம் உடைய வராய்வலம்வரும்பொழுது, சித்தீச்சரத்தில் தட்சிணாமூர்த்தி

சந்நிதியில், மல இருள் நீக்கியருளும் ஞான ஞாயிறுய்க் கருணைபொங்கும் மலர்முகத்துடன் கிழக்குத்திசைநோக்கி வீற்றிருக்கும் ஞானப்பிரகாச தேசிகரைக் கண்டார். கண்டவுடன் தமக்குச் சோமசுந்தரப் பெருமான் கனவில் உணர்த்தியருளிய ஞானதேசிகர் இவரே எனத் தெளிந்து, தாயைக்கண்ட கன்றெென விரைந்தோடி, அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "அருள்ஞான அண்ணலே" அடைந்தார்க்கு அருளும்அடிகளே, அடியேனையும் ஆட்கொண்டு பிறவிக் கடலினின்றும் எடுத்தருள வேண்டும் என்று கண்ணீர் வார, வேண்டிப் பணிந்தார். ஞான குரவர், ஞானசம்பந்தரை அருட்பெருக்கோடு இரு கைம் மலர்களாலும்தழுவிஎடுத்து,"ஞானசம்பந்தா! அஞ்சற்க!" என்று அபயங் கொடுத்து, வடக்கு முகமாக இருத்தித் திருவருள் நோக்கம் செய்து, அவரது சென்னிமேல் திருவடி சூட்டிச்சிவஞானேபதேசம் செய்து, அவர்கரத்திற் கிடைத்த சொக்கலிங்க மூர்த்தியை அவரது ஆன்மார்த்த மூர்த்தியாக லிங்க பூசையை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்து, ஞானபூசா விதிப்படி பூசிக்குமாற்றையும் உணர்த்தி, சிவஞானசித்தி நூல்வாயிலாக முப்பொருளின் இயல்பை இனிது உணர்த்தியருளினர். ஞானசம்பந்தர் ஞான தேசிகரது கருணை நீரில் முழுகி, உள்ளங்குளிர்ந்து, என்றும் இல்லா இன்பம் எய்தித் தம்மைப் பிறவிப்பெருங் கடலினின்றும் கரையேற்றியருளிய கருணைமூர்த்தியாகிய ஞானதேசிகர் மீது, "ஞானப்பிரகாசமாலை" என்னும் நற்றமிழ்ப் பாமாலையைப் பாடித் துதித்து, சொக்கலிங்கப் பெருமானையும் ஞானபூசா விதிப்படி நாள்தோறும் வழிபட்டுத் தம் ஆசிரியரது அடிநிழலைப் பிரியாது அங்கே இருந்தார்.

### மற்றுமோர் அற்புதம் :

இங்ஙனம் இருக்கும் நாட்களில் ஒருநாள் ஞான சம்பந்தர் சீடர் பலருடன் தாமும் குருமூர்த்தியின்பின்

கோயிலுக்குச் சென்று அர்த்தயாம தரிசனம் செய்து கொண்டு திருப்பி வருகையில் கைவிளக்கெடுப்போன் தூங்கிவிட்டதைக்கண்டு தாமே அப்பணியைச் செய்வா ராய் விளக்கைக்கையிற்கொண்டு குருமூர்த்திக்கு முன்னே பணிபுரிந்து சென்றார். குருநாதர் மடத்தினுள் செல்லும் பொழுது ஞானசம்பந்தரை, 'நிற்க' என்று சொல்லிச் சென்றார். ஞானசம்பந்தர். 'நிற்க' என்ற ஆணையைக் கடவாது கைவிளக்கைப் பிடித்தவாறு பொழுது புலருங் காறும் அங்கே நின்றிருந்தார். அவர், நின்றும், இருந்தும், கிடந்தும் நினைப்பது தம்குருவினது ஞானோபதேச அனுப வத்தையே யாதலால், அவ்வனுபவத்திலேதான் அப் பொழுதும் தம்மை மறந்து நின்றுகொண்டிருந்தார். ஞான சம்பந்தரது உயர்நிலையை விளக்கவேபோலும் அவ்விரவு விடாமழை பெய்தது. ஆயினும் கைவிளக்குடன் நின்றி ருந்த ஞானசம்பந்தர்மீது ஒருதுளியும் விழாமல் சுற்றிலும் ஒருகோல் அளவுக்கு அப்பால் மழைபெய்ததன்றி, மழை நீரும் உட்புகாமல் அந்த அளவிற்கு அப்பாலே ஓடியது.

குருவாணை :

விடியலில் எழுந்துவந்த குருபத்தினியார் ஞானசம்பந் தரது நிலையைக் கண்டு வியந்து, உள்ளே சென்று ஞானப் பிரகாசருக்கு ஞானசம்பந்தரது நிலையைத் தெரிவித்தார். அவர் விரைந்துவந்து பார்த்துத் திருவருளின் செயலைச் சிந்தித்து, கண்களில் நீர் ததும்ப ஞானசம்பந்தரைத் தமதுஇருகைகளாலும்தழுவிக்கொண்டு, நீர்அனைவர்க்கும் அருளொளி வழங்கும் குருநாதராகிவிட்டீர்; 'இனி நீர் உமது விருப்பப்படி வேண்டிய இடத்திற் சென்றிருந்து, உம்மை வந்தடையும் பக்குவர்களுக்குச் சிவஞானோ பதேசம் செய்து சமய பரிபாலனம் நடாத்தி வருவீராக'

எனக் கட்டளையிட்டருளினர். அதனைக் கேட்ட ஞான சம்பந்தர் மனம் பதைத்து, அடியேன் தேவரீரைவிட்டு எங்ஙனம் பிரிந்திருப்பேன் என்று பலவாறு வருந்தி,

" கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை
கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சை யோஇணங்
கார்புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்ர காச
சிதம்பர இன்
றுனக்கிச்சை எப்படி அப்படி யாக
உரைத் தருளே "

என்னும் கலித்துறையால் குருவாணைப்படி நடப்பதைத் தவிரத் தமக்குச் சுதந்திரம் யாதும் இல்லாமையைத் தெரிவித்தார். அதனைக்கேட்ட குருநாதர் உளம் மகிழ்ந்து, 'ஞானசம்பந்தரே, இத்திருவாரூருக்கு வடக்கில் இரண்டு யோசனை தூரத்தில் மாயூரத்திற்குக் கிழக்கே காவிரியின் தென்கரையில் எமதருமன் இறைவனை வழிபட்டு அருள் பெற்றதும், அகத்தியர் முதலிய முனிபுங்கவர்களால் வழிபடப் பெற்றதுமான வில்வாரண்யமாகிய தருமபுரத்தை யடைந்து, குருஞானசம்பந்தராய் விளங்கிப் பக்குவிகட்கு ஞானேபதேசம் செய்து சமய பரிபாலனம் நடத்தி, ஞான பீடாதிபதியாய்வாழ்வீர். அக்காலத்தில் குருவாரந்தோறும் கமலை வந்து செல்லலாம், என்று வாழ்த்தி ஆணை தந்தருளினர்.

அவ்வண்ணமேஞானசம்பந்தர் அவ்விடத்தினின்றும் அரிதின் நீங்கித் திருவாஞ்சியம் முதலிய சிறந்த தலங்களை வணங்கிக்கொண்டு தருமபுரத்தை அடைந்து, அங்கு ஸ்ரீதருமபுரீசுவரரையும், ஸ்ரீஅபயாம்பிகையையும் தரிசித்து

வணங்கி, அக்கோயிலின் மேற்புரத்தில் உள்ள வில்வா ரணியத்தில் ஆச்சிரமம் அமைத்துச் சொக்கநாதப் பெருமானை எழுந்தருளுவித்துப் பூசித்தும், ஞான பீடத் தமர்ந்து, தம்மை அடைந்த பக்குவர்கட்கு ஞானதீக்கை புரிந்து ஞானோபதேசம் செய்தும், பற்பல அற்புதநிகழ்ச்சி களால் திருவருளை விளக்கிக்கொண்டும் குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்தார்.

சிவாலயப்பணி :

குருஞானசம்பந்தரது அருள்நிலையைக்கண்டு வியந்த அகத்தியர்மாணுக்கர்களாகிய முனிந்திரர்கள், தங்கள் ஆச்சிரமங்களையும், தருமபுரேசுரர் ஆலயத்தையும் அவ ரிடம் ஒப்புவித்து, நித்திய நைமித்திகங்களை நன்கு நடத்தி வருதற்கு இரசவாதம் முதலிய சித்திகளையும் உபதேசித்து, 'எங்களைப்போலவே நீவிரும்; உமக்குப் பின்வரும் சந்ததி யாரும் பரம்பரையாய் இவைகளைப் பரிபாலனம் செய்து வருவீர்களாக' என்று ஆசீர்வதித்துச் சென்றனர். குரு மூர்த்திகள் அவைகளை அங்ஙனமே ஏற்றுச் சிவாலயத் திருப்பணி, திருவிழா முதலியவற்றை நன்கு நடாத்தி வந்தார்கள்.

இவ்வாறுஇருக்கும் நிலையில் குருஞானசம்பந்தர் தமது குருமூர்த்திகள் அருளியவாறே குருவாரந்தோறும் கமலை சென்று சித்தீச்சரத்தில் தட்சிணாமூர்த்தியையும் தமது ஞானகுரவரையும் தரிசித்து வந்தார். தொடக்கத்தில் மதுரையில் தங்கிச் சொக்கலிங்கப் பெருமான் தமது திருக் கரத்தில் வந்து, என்றும் தமக்கு ஆன்மார்த்த மூர்த்தியாய் எழுந்தருளியிருக்கப்பெற்ற காரணத்தாலும், கமலைதமக்கு ஞானோபதேசத் தானமாய் விளங்கினமையாலும் ஸ்ரீகுரு ஞானசம்பந்தருக்குத் தருமையேயன்றிக் கமலையும்,

மதுரையும் பதிகளாயின. இதனையே பின்னர்க் குமர குருபர அடிகள் நான்காவது குருமகாசந்நிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர்மீது பாடியருளிய பண்டார மும்மணிக்கோவையுள்,

" தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநக ராக அரசுவீற் றிருந்து "

எனக் குறித்தருளினர்.

### தில்லை நிகழ்ச்சி :

ஒருசமயம் இவர்கள் தில்லைக் கூத்தப்பெருமானைக் கண்டு வழிபடும் அவாமிக்கு அங்குப் போந்து தரிசனம் செய்து ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்து இரவு பகலாய் ஆனந்த நிட்டையில் அமர்ந்திருந்தார்கள். ஒரு நாள் ஆடவல்லபெருமான் அருட்பாங்கினல் சிவகாமி யம்மையார் தமது பள்ளியறையில் வைத்துள்ள பாயசத் தையும், திருவமுதத்தையும், கங்கைநீரையும் கொணர்ந்து அளித்தருளினர். அதன்பின் மீளவும் குருஞானசம்பந்தர், தமது ஞானபீடத்துக்கு எழுந்தருளினர்கள்.

### அருள் நூல்கள் :

தருமபுரமாகிய வில்வாரணியத்தில் இக்குருமூர்த்தி களது ஞானநோக்கால் புலியும், பசுவும் ஒரு துறையில் நீர் அருந்தி, ஒருபொழிலில் களித்து விளையாடின. இங்ஙனம் இவர்கள் இங்கு ஞான அரசு செலுத்தி வருங்காலத்தில் தம்பால் உபதேசம் பெற்றுவாழும் அடியவர்கள் பதி, பசு பாசத்தின் இயல்புகளை ஆய்ந்தறிந்து பிரபஞ்ச வாழ்க் கையைக் காய்ந்து, கல்வி கேள்வி அல்லல் ஓய்ந்து, என்றும் சிவானந்த வாரியுள்ளே ஒன்றும் இரண்டும்

அறத் தோய்ந்திருக்கும் வண்ணம் 'சிவபோகசாரம்' என்னும் அருள்நூலை அருளிச் செய்தார்கள். அவ்வருள் நூலின் பொருளை அனுபவமாகப்பெறும் பிரசாத யோகத்தை அவர்கள் நன்குணர்தற் பொருட்டு, 'சோடச கலாப்பிராசாதசட்கம்' என்னும் அரிய நூலையும் "திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்" என்னும் மற்றொரு நூலையும் ஆக்கியருளினர்கள்.

இன்னும் இவர்கள் காலத்தில் தில்லையில் இருந்த 'கண்கட்டி மறைஞான பண்டாரம்' என்னும் புலவர் ஒருவர் சிறந்த நூலறிவுபெற்றிருந்தும் திருவருள்வாய்க்கப் பெருத காரணத்தால், 'முத்திபெற்ற ஆன்மா அந்நிலையில் தான் அனுபவிப்பது தனது ஆனந்தமேயன்றிச் சிவனது ஆனந்தமன்று' என்ற ஒரு முடிவிற்குவந்து அம்முடிவிற்கு 'ஆன்மானந்த வாதம்' என்று பெயரிட்டு அதனை விளக்கி, 'முத்திநிலை' என்ற ஒருநூலை இயற்றினர். அதனல், பால் நினைந்து ஊட்டும்தாயினும்சாலப்பரிந்து தனதுஉலப்பிலா ஆனந்தமாய தேனை உயிர்களுக்குச் சொரிந்து அவை களைத் தனது திருவருள் வியாபகத்தில் அடக்கிக் காத் தருளும் முதல்வனது கருணையை அழித்துப்பேசும் அதி பாதகச் செயல் சிலரிடம் தோன்றுவதாயிற்று. அதனைத் திருவுளத்தடைத்த நம் குருமூர்த்திகள் உடனே 'முத்தி நிச்சயம்' என்னும் பேரருள்நூலைத் திருவாய் மலர்ந்தருளி அதன்கண்,

"அண்ணலைப்போல் ஆனந்தம் ஆன்மாவுக்குண்
எண்ணில் பிறப்பிறப்பை எய்துமோ" [டென்னில்

என்றும்,

"ஆசகற்றி நின் அறிவில் ஆனந்த மாம்சிவனைக்
கூசகற்றி, 'என்றன் குணம்' என்று --- பேசியிடும்

பேயா,வா திக்கேது பேசியிடில் நீ அந்த
மாயாவா திக்கே மகன் "

என்றும்,

"அன்றிஉயிர் சற்சித்தே; ஆனந்தம் இல்லை அதற்கு"

என்றும் பலவாறு அருளிச்செய்து 'ஆன்மானந்த வாதம், சுருதி, யுக்தி அனுபவங்கட்குப் பொருந்தாததொரு வீண் வாதம்' என்பதை விளக்கியருளினுர்கள்.

இவர்கள் தங்கள் பூசாகாலங்களில் தங்கள் ஆன் மார்த்த மூர்த்தியாகிய சொக்கலிங்கப் பெருமானை, 'தாணுவே சொக்கநாதா, எனை அருளில் ஆண்டவா சொக்கநாதா, சம்புவே சொக்கநாதா' என்ருற்போல் மனம் உருகி அழைத்துத் துதித்த வெண்பாக்களின் தொகுதியே சொக்கநாத வெண்பா.

குருவாரந்தோறும் கமலை சென்று தரிசிந்து மீண்டு வந்த இவர்கள் ஒருமுறை தம் ஞானதேசிகர் பரிபூரணம் அடைந்ததை யறிந்து அவரது பிரிவை ஆற்ருது பாடி யருளியது நவரத்தினமாலை.

இவ்வாறு இவர்கள் ஞானேபதேசத்தையேயன்றித் தோத்திர சாத்திர நூல்களையும் செய்து ஞான அரசு செலுத்தி வரும் நாளில் தமக்குப்பரிபூரண நிலை வருவதைத் திருவருள் உணர்த்த உணர்ந்து, தமது ஆச்சிரமத்தின் மேற்குப் பக்கத்தில் 'ஞானபுரீசுவரர்' என்னும் திருப் பெயரால் சிவலிங்கப் பிரதிட்டை செய்து, தம் மாணக்கர் களில் 'ஆநந்தபரவசர்' என்பவருக்கு ஞானேபதேசம் செய்து பீடாதிபத்தியத்தை நல்கி, அச்சிவலிங்கப் பெரு மான் திருவடி நிழலிலே சிவசமாதி கூடினுர்கள்.

ஸ்ரீ ஆனந்த பரவச தேசிகர் அதிதீவிர பக்குவம் உடையவராய் இருந்த காரணத்தால், உலகியல் வாதனை அறவே நீங்கப்பெற்றுத் தம் ஆசாரியர் திருமுன் சென்று வணங்கி ஞானபுரீசுவரர் ஆலயத்திற்கு நேரே மேற்குத் திசையில் அச்சிகரத்தை நோக்கியவாறே சிவயோகத்தில் அமர்ந்து சிவசமாதி கூடிச் சிவானந்த பரிபூரணத்தை அடைந்தார்.

இதனையறிந்த அடியார்கள் ஞானசந்தானமும் 'ஞான பீடாதிபத்தியமும் தொடராதொழிகின்றனவே' என்று வருந்தி சிவசமாதி கூடிய தங்கள் ஆதிபரமாசாரியார் திருமுன் சென்று, நிதழ்ந்தவற்றை எடுத்துச் சொல்லித் தங்கள் குறையையும் விண்ணப்பித்துக் கொண்டார்கள். அதுகாலை அடியவர்கள் குறையை நீக்கவும், அரனருள் விளக்கமாகிய ஞானபீடம் என்றும் நின்று நிலவி ஞானத்தைவழங்கவும்திருவுளங்கொண்டு, குருமூர்த்திகள் சமாதியினின்றும் வெளிப்போந்து அடியவர் கூட்டத்துள் 'சச்சிதானந்தம்' என்பவருக்கு ஞானோபதேசம் செய்து பீடாதிபத்தியத்தை வழங்கினார்கள்; ஆயினும், சச்சிதானந்தருக்குத் திருவருள் கூட்டாமையால் நிட்டானுபூதி கிட்டவில்லை.

அஃதுணர்ந்த ஆசாரியமூர்த்திகள் இரக்கங்கொண்டு, 'ஆனந்தபரவசரது நிலையை நேரிற் கண்டபின்பும் உமக்கு உலக மயக்கம் நீங்கி உயர்கதியிற் செல்லும் நிலை உண்டாகவில்லை. யான், எனது என்னும் அபிமானம் நீங்கவில்லை, அந்தோ! இதற்குக் காரணம், உம்மைப் பற்றியிருக்கும் மலம், மாயை, கன்மம் என்னும் மும்மலங் களின் சேட்டைதானே? இனி உமக்கு உயர் ஞானம் பிறவாதோ? என்று அறிவுறுத்தும் முறையில் கீழ்க்காணும் பாடலைப் பாடி ஞான நோக்கம் செய்தருளினார்.

" தானந்தம் ஆதிநடு இல்லா தோங்கும்
சச்சிதா னந்தமயந் தானே ஆன
ஆனந்த பரவசனைக் கண்டும் கண்டும்
அத்தந்தோ பரகதியை அறிந்தீ ரில்லை;
மானந்தான் வடிவாகி நிற்ற லாலோ?
மலமாயை கன்மம்இவை மடியா தாலோ?
ஞானந்தான் உமதுளத்தில் உதியா தாலோ!
நாம்அறியோம் உமதுமயல் நவிற்று வீரே "

ஞானகுரவரது அறிவுரையாலும், அருள் நோக்கத்தாலும்சச்சிதானந்தரது மலமாயைகன்மங்கள் பற்றற்றொழிய உண்மை ஞானம் பிறந்து நிட்டானுபூதிநிலையை எய்தினர். அதனால் மகிழ்வுற்ற ஸ்ரீ குருஞானசம்பந்தர் 'இனி நீர் பீடாதிபதியாய் வீற்றிருந்து சொக்கநாதரை வழிபட்டுக் கொண்டு, ஸ்ரீ தருமபுரேசர், ஸ்ரீ ஞானபுரீசர்ஆலயங்களைச் செவ்வனே ஓம்பி, நும்மை வந்து அடையும் பக்குவிகட்கு ஞானோபதேசம் செய்து வருவீராக' என அருளாணை தந்து வைகாசித்திங்கள் அமரபக்கத்துச் சஷ்டி திதியில் சிவசமாதி எய்தி, சிவபரிபூரணம் எய்தினார்கள். சிவசமாதியில் ஐக்கியம் எய்தும்நிலையை அணுகிக்கொண்டிருந்தவர்கள் தம் அடியார் பொருட்டு மீள எழுந்தருளி வந்து பீடாதிபத்தியத்தை நிலைபெறுத்திய இக்குருமூர்த்திகளது அருட்செயல், அதிசயத்தினும் அதிசயம் அன்றோ!

இவர்கள் தாங்களே பிரதிட்டித்து ஜீவ சமாதியில் இருந்த காரணத்தால் இவ்வாலயம் சிவாலயமேயாய் முறைப்படி நித்திய நைமித்திக வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. பிற்காலத்தில் ஏழாவது குருமகாசந்நிதானத்தின் காலத்தில் சிலரது சொல்லைக்கேட்டு இவ்வாலயத்தை ஒருசமாதிக்கோயில் என்று இகழ்ந்துதகாத செயல்செய்ய நினைத்த தஞ்சை மன்னன் கண் இழந்து பின் தனது

குற்றத்தை உணர்ந்து குருமூர்த்திகளை அடைந்து மன்னிக்க வேண்டி அவர்கள் அருளாணையின் வண்ணம் ‘ மன்னன் பந்தல் ’ என்னும் இடத்தில் தங்கியிருந்து பல நாள் ஞானபுரீசுவரர் ஆலயத்தை அர்த்தயாம காலத்தில், வழிபட்டுக் கண்பெற்று மகிழ்ந்து, அர்த்தயாம பூசைக்குச் சில நிலபுலங்களை முற்றூட்டாகத் தந்து சென்ற செய்தி இவ்வாலயத்தின் பெருமையை, விளக்கும். ஜீவசமாதியிலிருந்து வெளிப்போந்து மூன்றுவது பட்டமாக ஸ்ரீசச்சிதானந்த தேசிகரை இருத்திச் சென்றது முதல் இவர்களது ஞானபீடம் வழிவழியாக இன்றுகாறும் இனிதே தழைத்தோங்கி வருகின்றது.



பண்டாரசாத்திரம் ஆகிய

# அருள் நூல்கள்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானத்தில் தருமபுர ஆதீனத்து ஞானபீடத் தாபகராகிய ஸ்ரீகுருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய மூர்த்திகள் தமது அற்புதம் நிறைந்த அருள்வாழ்க்கையில் அவ்வப்பொழுது அருளிச் செய்த அருள் நூல்கள் எட்டு. * அவை இவை என்பது அவர்களது வரலாற்றில் ஆங்காங்குப் பெயரளவில் எடுத்துக்காட்டப்பட்டது. அவற்றின் அருமை பெருமை களை ஓரளவேனும் ஆய்ந்துணர்ந்து பயன்கொள்ளுதல் அனைவர்க்கும் இன்றியமையாக் கடனாகும்.

1. சொக்கநாதக் கலித்துறை; இந்நூல், ஸ்ரீ குருஞான சம்பந்தர் இளமையிலே தம்தாய் தந்தையரையும் விடுத்து ஆலவாய்ப்பெருமானே அம்மையும் அப்பனும் என அடைந்து மதுரையில் அப்பெருமானை வழிபட்டிருந்த காலத்தில்பெட்டகக்கோயிலுடன் பொற்றாமரைத்தீர்த்தத் திலிருந்து அப்பெருமான் அவரது கரத்தில் சேர்ந்த பொழுது விம்மிதம் உற்றுச்சந்நிதியை அடைந்து அவனது கருணையை நினைந்து உருகிப் பாடிய எியது. பதினொரு கட்டளைக் கலித்துறைகளால் ஆனது. ஈற்றில், பெரும் பாலும் 'மதுராபுரிச் சொக்கநாயகனே' என்று அழைத்துத் தமது விண்ணப்பத்தினை அவ்விறைவனிடத்தில் தெரி வித்துக்கொள்வது.

---

* ஞானாவரண விளக்கம் என்பது தனிநூல் அன்று சித்தியாருக்கு விளக்கமாக இடையிடையே சில பாடல் களைச் சேர்த்து ஆக்கியருளியது. அப்பாடல்களும் இப் பொழுதுகிடைக்கவில்லை. வெள்ளியம்பலவாணர்உரையே உள்ளது.

'கண்ணுக்கிய பொருளாகிய' என்னும் இதன் முதற் பாட்டு முன்பே காட்டப்பட்டது. கருத்துக்கினியனாய் உள்ளத்துள்ளே நின்று இன்ப ஊற்ருய் ஒளிர்பவன் இறைவன். அவன், கண்ணுக்கும் இனியனாய்க் காட்சி வழங்கும் முறையில் இவரது கரத்தில் எழுந்தருளினான் என்ருல்அதுதேவர்க்கும் கிடையாத திருவருட்பேறன்ருே! அதனை, 'விண்ணும் பரவிடும் அற்புதமே,' என்றும், 'என்ன விஞ்சை' (வித்தை) இது' என்றும் வியந்து போற்றினார். மெய்ந்நெறிநின்ற அருளாளர். விண்ணோர்க்கும் கிட்டாத அற்புதத்தை எளியேனுக்கு விளைத்த நீ, இம்மண்ணோர்க்கு அரிய உனது பூரண இன்பப் பெரும் புணரியுள்ளே (கடலிலே) மூழ்கியிருக்கும்படி திருவருள் புரியவேண்டும் என வேண்டினார். அப்பெரும்பேறு சிவ பூசையினாலேயே கிடைக்கும் என்பது கருத்து.

தம் கரத்தில் வந்த கருணையை வியந்து அன்புருவாய் நின்ற அவர், எனக்குஉன்னையன்றி ஆதாரம் இப்பூமியில் யாரிருக்கின்ருர்கள்! ஆதரவற்ற எனக்கு மீதான வெளியை (அருள்வெளியாகிய பரவெளியை)க் காட்டத் திருவுளங்கொண்டு இளமையிலே என்பால் எழுந்தருளி வந்த உன்னைப் பூசிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதைச் சொல்லாமற் சொல்லி, என்னை உன் வசப் படுத்திக்கொண்டாய்! இனி நான் அம் மீதான வெளியை அடையும்படி அருள்செய்ய வேண்டும். யான் உன்னைப் பாடும்படியும், பணியும்படியும் அருள்புரியவேண்டும். அனைத்தையும் ஆட்டுவிப்பவன் நீ ஆதலால் எனது பாசத்தைப்போக்கி, என்னை ஆனந்த வெள்ளத்தில் ஆக்கியருள்வதும் உனக்கேகடனாம். என்னைப் புலன்வழி ஓடித்திரியாமலும், வினைக் குழியில் வீழாமலும் காத்தருள வேண்டும். இவ்வுலகில் நான் பிறவாத இடம் இல்லை; பிறந்து துன்புருத இடம் இல்லை; துன்புற்று இறவாத

இடம் இல்லை. ஆகையால் என்னைப் பிறவியில் வைத்து ஆட்டியதுபோதும்; இனி உனது ஆனந்தத் தேனைப்பருக வைக்க வேண்டும். பிறந்து இறந்து உழன்ற காலங்களில் நான் செய்த வினைக்கோ அளவில்லை; ஆயினும் அவை அனைத்தையும்நீக்கிநின் திருவடிக்குஅடியேனை ஆளாக்கிக் கொள்ளல் வேண்டும். புலன்வழி ஓடிய என் அறிவை உன்பூசையின்வழித் திருப்பிவிட்டாய்; ஆகையால், இனி என் வினைகளை வாராமல் தடுத்து, உனது, பூரண இன்பத்தில் நீங்காதிருக்க வைத்தருள் என்றெல்லாம் பின்னர் விண்ணப்பம் செய்தார்,

" நெஞ்சம் கல்லாம்; கண்ணிணையும் மரமாம்
தீவினையினேற்கே "

" மரக்கண் என்செவி இரும்பினும் வலிது "

" யானே பொய், என்நெஞ்சும் பொய் "

" வெற்றடியேனை விடுதி கண்டாய் "

என்றுற்போன்ற திருவாசகத் தொடர்களை நினைப்பூட்டி நிற்கும் பகுதிகள் இந்நூலிற் பல.

இதன்கண் ஒருபாடலில், ஏருதவிண்ணப்பம்கூறுநின்றேன்.அது ஏதெனிற் கேள்என்று எடுத்து 'மாறுமல் இந்த மகாலிங்கந்தன்னில் மகிழ்ந்திருந்தே - ஆருப் பவத்துயர் ஆற்றிச் சிவானந்தம் அன்பர்க்கு என்றும்-பேறுக நல்குதி' என்று வேண்டியருளினுர்கள்; அந்த விண்ணப்பத்தின் பயனே இன்றும் அவர்களது ஆன்மார்த்த மூர்த்தியில் ஆலவாய்ப் பெருமான் எழுந்தருளியிருந்து அடியார்க்கு அருள் வழங்கி நிற்பது. எனவே இச்சொக்கநாதக் கலித்துறை என்னும் தோத்திர நூலே தருமை ஆதீனத்தின் ஆதார நூல் என்று கூறத்தடையில்லை.

2. 'பண்டாரக் கலித்துறை' என்னும் ஞானப்பிரகாச மாலை: இந்நூல் ஸ்ரீகுருஞானசம்பந்தர் ஆலவாய்ச்சொக்கர் அருள்வழியே ஆரூரில் தமக்கு விசேட நிருவாண சிவதீக்கை பண்ணிச் சிவஞானேபதேசம் செய்துசிவலிங்க பூசையை எழுந்தருளுவித்து, ஞானனுபூதி காட்டிய தம் ஞானகுரு கமலை ஞானப்பிரகாசரைப் பேரன்போடும், பேரானந்தத்தோடும் தோத்திரித்துப் பாடியருளியது.

பண்டாரம் என்பதற்குப் பொருள் 'கருவூலம்-பொக்கிஷம்' என்பது; ஆதலால், ஞானவேட்கையுடையவர்கள் ஞானக் கருவூலமாகிய ஞான தேசிகரையே பண்டாரம் என்பர். அதனுல் ஞானதேசிகரைத் துதிக்கும் இந்நூற்கு, 'பண்டாரக் கலித்துறை' என்ற பெயரும் உளதாயிற்று. 'ஆலம் உண்டான் எங்கள் பாண்டிப்பிரான் தன் அடியவர்க்கு - மூலபண்டாரம் வழங்குகின்ருன் வந்து முந்துமினே' என்ற திருவாசகமும் இங்குநினைக்கத்தக்கது. இது காரணத்தாலேயே ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிச் செய்த நூல்கட்கும் 'பண்டார சாத்திரம்' என்ற பெயர் வழங்குகின்றது,

இதனுள் இப்பரமாசாரிய மூர்த்திகள் தங்கள் ஆசாரியரது ஞானப் பெருநிலையைப் பலவாற்ருலும் வடித்தெடுத்துக் காட்டியுள்ளார்கள். திருவார் கமலையுள் ஞானப்பிரகாசன் திருவடியைச் சார்ந்தவர்கள் இருக்கும் திசையிலும் எமன் அணுகான்; பிரமன் தான் இனிப் படைக்க வேண்டியவர் பட்டியலில் அவரது பெயரைக் குறியான்; ஆதலால், மனமே, இனி நீ இறப்பிற்கும் பிறப்பிற்கும் அஞ்ச வேண்டா; இனி உனக்குக் கிடைப்பது பேரின்ப சாகரமே என்கின்ருர்.

'முன்னைத் தவம் உடையவர்க்கே ஞானப்பிரகாசரது நல்லுருத் தரிசனம் கூடுவதாகும்; கமலை ஞானப்பிரகாசர்

ஞானத்தைவழங்க அருட்கொடி கட்டியுள்ளார். அவரிடம் ஞானத்தைப்பெற இதுவே தருணம்; உலகீர் இனி நீங்கள் தாமதிப்பீர்களாயின், கெட்டொழிவீர்; விரைந்துசெல்லுங் கள், ஞானப்பிரகாசர் முத்திக்கொடி கட்டி இருப்பவர்; அன்பர்க்கு இன்பம் அளிப்பவர்; கூறவொண்ணுப் பெருமையுடையவர். அவரைச் சிவமென்று எண்ணுதவர் நிரயத்துக்குடிபுகுவர். முத்தியடையவேண்டிக் காட்டிலும் மலையிலும்கனல்மேல்நின்று கடுந்தவம் புரிகின்றவர்களே. வாருங்கள்; 'கமலை ஞானப்பிரகாசன்' என்ற பெயரைச் சொல்லுங்கள்; அது போதும். உங்கள் பிறவி நீங்குதற்கு. பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இயல்பாகிய சைவ சித்தாந்தத்தை ஞானப்பிரகாசரது திருமடத்தில் உள்ள பல்லியும் சொல்லும்' என்றெல்லாம் தம் குருவின் அருட்பெருமையை உலகிற்கு விளக்கியருள்கின்ருர். இதனுள், 'நற்ருங்கதி அடைவோமெனிற் கெடுவீர் ஓடிவம்மின்' 'பிற்பால் இருந்து பேழ்கணித்தால் பெறுதற் கரியன் பெம்மானே' என்ற திருவாசகப்பொருள்கள் விளங்குதல் காணலாம்.

மற்றும், 'ஞானப்பிரகாசனே என் ஆண்டவன்; அவனதுஒருமொழியால் யான்உலகத்தின் நிலையாமையை உணர்ந்து, சிவானந்தத் தேனைப் பருகினேன்; எனக்கு இனிப் பர முத்தி கிடைத்தல் நிச்சயம். ஞானப்பிரகாசன் என் சிந்தையுள்ளே பேராதிருத்தலால் இனிச் சென்மம் வாராது. சிவானந்தம் போகாது. சித்தாந்தத் தெளிவாகிய முப்பொருளின் இயல்புகளை அடியேனுக்கு ஞானப் பிரகாசன் தித்திக்கத் தித்திக்கச் சொல்லியருளினன். ஞானப்பிரகாசனது மோனப்பிரகாச மொழியைக் கேட்ட வுடன் எனக்கு மூச்சு அலைவற்று நின்று, (பிராசாத யோக நிலை கைவந்து) ஊனப்பிரகாசம் ஒழிந்து. உள்ளம்உருகிச் சென்று வானப்பிரகாசமாகிய ஞேயத்திலே அழுந்தி

விட்டது. எனது பாசத்தைப் போக்கிப் பதியிடத்தில் என்னை நிறுத்தியருளிய கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசன், மானும், மழுவும் மறைத்துவந்த சிவனே' என்பனபோலத் தம் அனுபவ நிலையை எடுத்து அருளிச்செய்தன பல. ஆசாரியரை முன்னிலைப்படுத்தி, 'எனக்கு நீயே துணை; என் குற்றங்களைப் பொறுத்தருள்; நீ ஒறுப்பின் என்னை ஆதரிப்போர் யார்? எனது புன்மொழியையும் கேட்டருள்' என்று இவ்வாறு விண்ணப்பித்துக்கொண்ட விண்ணப்பங்களும் பல. இவற்றால் இத்தோத்திரநூலை ஓதுவோர் ஞானகுருவின் பெருமையை நன்குணர்ந்துபயன்பெறுதல் திண்ணம்.

3. சொக்கநாதவெண்பா: இது ஸ்ரீகுரு ஞானசம்பந்தர் தமது ஆன்மார்த்த மூர்த்தி வழிபாட்டில் அவ்வப்பொழுது அன்புற்றுப் பாடியருளிய வெண்பாக்களின் தொகுதி என்பது முன்பேசொல்லப்பட்டது. இதில் இப்பரமாசாரிய மூர்த்திகள் தங்கள் ஆன்மார்த்த மூர்த்தியை நினைந்துவகை வகையாகஅழைத்தருளும் முறை மிக அழகிது. 'ஆடரவம் சூழ் மதுரை அம்மானே! அன்பருடன் கூட விளையாடி வரும் கோமானே! ஆலம் தரித்தலிங்கம்; ஆலவாய்ச் சொக்கலிங்கம்; மூலமாய் எங்கும் முளைத்த லிங்கம், சிற்பரானந்தா! திருவாலவாய்உறையும் தற்பரா! நித்தியா! சுத்தா! நிராமயா! சொல் தவறாச் சத்தியா! பூரணா! செங் கமலப் பொற்பாதா! கூடலில் வாழ் ஆரணா! சிரகரா! திரபரா! அரகரா! கருணாநிதியே! கடவுளே! அன்பர் பொருளான பேரின்பப்பொற்பே என்றாற்போல்வன அழகிய துதிகளாய் அமைதலைக் காணலாம்.

இவ்வாறு அழைத்து இவர்கள்செய்யும் விண்ணப்பங் கள் பல. நீர் எல்லாம் வல்ல சித்தர் என்றால் என்னு டையபொல்லாத குணத்தைப்போக்கி என்னை நல்லவனாக

ஏன் செய்தல் கூடாது? எனது உள்ளத்தில் ஆசா பசாசை அகற்றிப் பேசா அநுபூதி பிறக்கச்செய்; நான் எத்துணை யோ காலமாக இறந்தும் பிறந்தும் இளைத்துப் போனேன்; இனி, மறந்தாயினும் யான் பிறவாத வரத்தை எனக்குத் தந்தருள். நித்தம் எழுந்தருளி எனக்குப் புத்தி மிகமிகவும் போதித்துச்சித்தமயல் போக்குவாய் இன்பசுகபூரணத்துள் இரண்டறவே ஆக்குவாய்; எனக்கு உலகம் கான்ற சோறாய்க் காணப்படவில்லை; இன்ப வெள்ளத்தில் நான் உறங்கவில்லை; என்றால், உன் அருளைப் பெறுவது எப்படி? என்னிடத்தில் தவம் சிறிதும் இல்லை; அவமோ அளவின்றிஉள்ளது, நான்சிவத்தைப்பெறுவதுஎங்ஙனம்? நான் நோயால் (வினையால்) வருந்தி உன்னை நூறு குரல் கூப்பிட்டும், நீ யார் என்று என்னைக்கேட்காமல் இருக் கின்றாய்; இதுஉனக்கு நீதியோ? நீபன்றிக்குட்டிகளுக்கும் தாயாய்ப் பால்கொடுத்தவன் அல்லவோ? நான்பேரன்பன் அல்லன்; பிழை செய்யேன் தானல்லன்; ஓர் அன்பும் இல்லா உலுத்தனாயினும் என்மேல் பேரன்புகாட்டி, என்னைக்காட்டி,உன்னைக்காட்டிபேரின்பத்தொட்டிலிலே ஆட்டி வளர்க்க வேண்டும். உன்னைச் சிங்காரித்து உன தழகைப் பாராமல் என்னைச் சிங்காரித்து இடர்ப்படுகின் றேன்; எனக்கு உன் திருவடி தருவாயோ? எந்நாளும் நான் உனக்கே பணிசெய்யவும், உன்னையே நினைக்கவும் ஆகிய வரத்தை எனக்கு நீ அளித்தருள வேண்டும்' என்றாற்போல்வன அவ்விண்ணப்பங்களுட் சில.

இத்தோத்திர நூலிலும் அமைந்த சாத்திரப் பகுதிகள் பல. 'எரி சுடுவதல்லால் இரும்பு சுடுமோ! அதுபோல பெரியவர்க்கும் உன் செயல் அன்றிச் செயல் உண்டோ? நீ உணர்த்தினால் நான் உணர்வேன்; இல்லாவிடில் உணரும் வகை இல்லை. என்னது யான் என்பதும், யான் செய்தேன்; பிறர்செய்தார் எனலும் அதிபாதகம். எல்லாம் உனது பதம்; எல்லாம் உனது செயல்; எல்லாம் உனதருளே' என்பது முதலியவை அறியத்தக்கன.

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ! எக்காலம் மும் மலங்கள் இற்றிடுமோ! எக்காலம் ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோஎன்னுளம்! எக்காலம் மெய்க்கே இரைஇடுதல் இற்றிடுமோ! எக்காலம் பேசானுபூதி பிறந்திடுமோ என்றாற்போல அமைத்துள்ள பாடல்கள் இவர்கட்கு முத்திப்பேற்றில் இருந்த பெருவேட்கையை எடுத்துக் காட்டி நிற்கின்றன. 'தண்டு வரும்; குண்டு வரும்; தானே வரும்; ஆனே வரும்' என்பனபோன்ற பாடல்கள் இறைவனை வணங்குவார் எல்லா நலங்களையும் பெற்று வாழ்வர் என்பதை விளக்கும். இங்ஙனம் இச்சொக்கநாத வெண்பா பத்திப் பரவசத்தைப் பலவகையிலும் பாரில் உள்ளார்க்கு வழங்குவதாம்.

4. சிவபோகசபரம்: இந்நூலே இவர்கள் அருளிச் செய்த பெரிய சாத்திரநூல். இதில் சைவசித்தாந்த ஞானம் மிகத் தெளிவாக எளிய முறையில் திரட்டித்தரப்பெற் றுள்ளது. முழுவதும் வெண்பாவால் ஆயது 'இறைவன் குருவாகி வந்து அருள்புரியாவிடில் ஒருவருக்கும் ஞானம் உண்டாகமாட்டாது' என்பது சித்தாந்தத்தின் சீரிய துணிபு. இதனை இவர்கள்,

" ஆர்அறிவார் நீதிவழி? ஆர்அறிவார் சித்திமுத்தி?
ஆர்அறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும் ---
[பார் எவர்க்கும்
கத்தன், கமலையில்வாழ் ஞானப்ர காசன்எனும்
அத்தன்என்போல் வந்திலனால் "

என்ற வெண்பாவில் மிகத் தெளிவாக அருளினார்கள்.

" நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்,
தானுந்தன் தையலும்தாழ்சடையோன் ஆண்டிலனேல்"

என்ற் தோத்திரமும்,

" ஆகமங்கள் எங்கே? அறுசமயந் தான்எங்கே?
யோகங்கள் எங்கே? உணர்வெங்கே --- பாகத்
தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு "

என்ற சாத்திரமும் இங்கே கருதத்தக்கன.

" கண்டேன்;இப் பாசங் கழிந்தேன்; அமுதைமுகந்
துண்டேன்; சுகானந்தத் துள்ளிருந்தேன் --- வண்டிமிர்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத [காத்
ஞானப்ர காசனையே நான் "

என்றதனல். குருதரிசனம் ஒன்றே எல்லாவற்றையும் தருதலை இனிது விளக்கினர்கள்.

" ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்,
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும் --- குருவருளால்
வைத்த படிஇருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம் "

என்பது, 'குருவருளில் நிற்காமல் நூல்களை அளவின்றிக் கற்பதால் மனக்கவலை ஒழியாது' என அருளியதாம். இங்கும்,

" சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தில்வாய்க்கும்நலம் வந்துறுமோ---ஆர்த்தகடல்
தண்ணீர் அருந்தினர்க்குத் தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு "

என்ற சாத்திரச் செய்யுள் நினைக்கத் தக்கது.

" முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் --- ஒத்த
இரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவர்என் றேதும் விதி "

என்ற சாத்திரப்பொருளை,

" இந்தனத்தில் அங்கி எரியுறுநீர் போல்இரதம்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் --- சந்ததமும்
அத்துவிதம் ஆனதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை "

என்ற இச்சிவபோகசார வெண்பாவில் காண்கின்றோம்.

இந்நூலில்தான் குருமூர்த்திகள் தங்கள் உபதேச நூலாகிய சிவஞானசித்தியாரின் பெருமையைப் பின்வருமாறு மிக அழகாக விளக்கியுள்ளார்.

" ஆறுாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் --- பேறாகப்
பார்விருத்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும் "

சிவஞானத்தைப் பெறுதற்குச் சிவஞான சித்தியில் ' ஓர் விருத்தப் பாதி போதும் ' என்று அருளிய இவர்கள். முப்பொருளின் இயல்பை ஒன்று அல்லது இரண்டு வெண்பாவிலே மிகத் தெளிவாகத் திரட்டித் தெரிவிக்கின்றார்கள்.

" என்னை அறிவென்றான்; என்னறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான்; சந்ததமும் --- என்னைஉன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான்; இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம் "

" எங்கும் இருக்கும் அறிவுநீ! ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்; --- பொங்கும்
மலம்மறைத்தல்; மாயை மயக்கல்; விகாரப்
பலமனைத்தும் கன்மமலம்; பார் "

' வெள்ளத்துள் நாவற்றியாங்கு ' என்ற திருவாசகத்தை நினைப்பிக்கும் முறையில்,

" ஈச னடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே "

என்று அருளிய பகுதி நம்மனோர் அறிந்து பயன்கொளற்பாலது.

" புசிப்போம் சிவபோகம்; பூரணமாய் எங்கும்
வசிப்போம்; உலகில் வசியோம்; --- முசிப்பின்றி
வாழ்வோம்; சிவத்தையுணர் மாதவர்தம் பொன்
தாழ்வோம் எமக்கார் சரி " [னடிக்கீழ்த்

என்னும் அரிய வெண்பா, இவர்களது சிவானுபூதிச் சிறப்பைத் தெள்ளத்தெளிய விளக்குகின்றது. இங்ஙனம் அனுபூதியில்திளைத்துநின்ற இவர்கள் ஐயன் அருளையன்றி வேறு செயலற்றிருந்தமையை,

" எங்கே நடத்துமோ, எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன் --- கங்கைமதி
சூடினன், தில்லையிலே தொந்தொமென நின்றுநட
மாடினன் எங்கோன் அருள் "

என்ற வெண்பாவால் அறிகின்றோம். இங்ஙனம் திருவருள் வெள்ளத்திலே திளைத்துச் செயலற்றிருந்த இவர்கள், நம்மனோர்க்குச் செய்யும் உபதேசங்களைத் தங்கள் நெஞ்சை நோக்கிச் சொல்வனவாக அருளிச் செய்கின்ற முறை அறிந்து மகிழத்தக்கது.

" ஊட்டும் வினை இருந்தால், உள் ஆணை; உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும் --- கேட்டுத்
திரியாதே; வந்துதில்லைத் தெய்வமே என்றென்
றெரியாதே; நெஞ்சே இரு "

" பரபரக்க வேண்டா; பலகாலுஞ் சொன்னேன்;
வரவரக்கண் டாராய் மனமே ! --- ஒருவருக்கும்
திங்கு நினையாதே, செய்ந்நன்றி குன்ருதே;
ஏங்கி இளையா திரு "

பெரியார் சிறியார் இலக்கணங்களைத் திருவள்ளுவர், 'செயற்கரிய செய்வார் பெரியர்; - செயற்கரிய செய்கலாதார்' என்று கூறினர். இக் குருமூர்த்திகள்,

" நாம்பெரியர் என்னும்அதை நாடா நடக்கும் அவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும்; --- நாம்பெரியர்
என்பார் சிறியர்; இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல் "

என்று கூறுகின்ருர்கள். 'பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை அணியுமாந் தன்னை வியந்து' என்னும் திருக்குறளை இங்குநினைவு கூர்க. இப்பெருந்தகைமையேயன்றிக் குருவருளாலும் திருவருளாலும் தத்துவ ஞானத்தைப் பெருத சிலரும் தம்மையே பெரியவர்களாக நினைத்துத் தாம் பிறருக்கு உபதேசம் செய்ய முன்வருவதைக்கண்ட இவர்கள்,

" தன்னை அறியார்; தலைவன் றனையறியார்;
முன்னை வினையின் முடிவறியார் --- பின்னைக்
குருக்களென்று பேரிட்டுக் கொள்வார்கள், ஐயோ!
தெருக்கள் தனிலே சிலர் "

என்று இரங்கிக் கூறுகிருர்கள். இவ்வாறே கல்வியை மட்டும் கற்று அனுபவத்தில் ஆசையில்லாத சிலர், அக் கல்வியறிவைக் கொண்டு தர்க்கவாதம் பேசி மகிழ்வதைக் கண்டு,

" கற்கஇடர்ப் பட்டுமிகக் கற்றஎலாம் கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ --- நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கஅல்ல வோ"

என்று அருளிச்செய்கின்றார்கள். மற்றும்,

" நீதியிலா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும் பூரணமாம் --- சோதி
கழல்அறியா ஆசானும், கற்பிலரும் சுத்த
விழல்எனவே நீத்து விடு"

என்றாற்போன்ற அறிவுரைகள், உலகர் அனைவரையும் நல்வழிப்படுத்துவனவாம்.

திருஞானசம்பந்தர் அருளிச்செய்த பஞ்சாக்கரத் திருப்பதிகத்துள், 'புத்தர் சமண் கழுக் கையர்' என்னும் திருப்பாடலை அவர் திருக்கூட்டத்து அடியவர் ஒருவர் சொல்லிச் சாரிபுத்தன் தலையில் இடிவிழச் செய்தார். குருஞானசம்பந்தர் அருள்வாக்கில் வந்த இந்நூலில் இரு வெண்பாக்களை ஏழாவது மகாசந்நிதானம் ஸ்ரீ திருவம்பல தேசிக சுவாமிகள் சொல்லி, ஸ்ரீ ஞானபுரீசர் கோயிலை இடிக்குமாறு ஆட்களை ஏவிய தஞ்சை மன்னனைக் கண் இழக்கவும், ஆட்களை மூர்ச்சையடையவும் செய்தார்கள். அப்பாடல்கள் பின்வருவன.

" ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தின்
மோசம்வந்த தென்று மொழியலாம் --- ஈசனே
ஆக்குவதும், ஆக்கி அழிப்பதுவுந் தானானால்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து"

" தேசஞ் சிவாலயங்கள் சேர அலையஒரு
மோசம்வந்த தையோ முதல்வனே --- தேசத்து
மன்னைவெறுப் பேனோ? வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறும் பேனோ உரை"

இவர்கள் இந்நூலின்கண் முடிவாக அனைவர்க்கும் அருளிச்செய்ததுதிருமுறைப்பாராயணமும், திருக்கோயில் வழிபாடுமே. அவ்விருவெண்பாக்களும் என்றும் யாவரும் நினைக்கற்பாலன.

"ஆசையறுய்; பாசம்விடாய்; ஆனசிவ பூசைபண்ணுய்;
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய் --- சீசீ
சினமே தவிராய்; திருமுறைகள் ஓதாய்;
மனமே உனக்கென்ன வாய்"

"தில்லைவனம், காசி, திருவாரூர், மாயூரம்,
முல்லைவனம், கூடல், முதுகுன்றம் --- நெல்லை, களர்
காஞ்சி, சுழுக் குன்றம், மறைக் கா.டருணை, காளத்தி,
வாஞ்சியமென் முத்திவரும்"

இவ்வரிய சாத்திர நூலைஓதி, உணர்ந்து, உளங்கொள் வார் உண்மை ஞானத்தை உற்று அனுபூதி நிலையை அடைதல் ஒருதலை. இந்நூற்கு அகல உரை ஒன்று எழுதப்பட்டு வெளிவந்திருத்தலால், அதுகொண்டு இதன் பொருளைத் தெளிய உணரலாகும்.

ஆசாரிய பீடத்து இருப்பவர்களுக்கு இவர்கள், பின் வரும் பாடலை உபதேசித்துள்ளார்கள்.

"அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய் --- இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை."

5. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்: இப் பெயரே இந்நூற்பொருளையும், அமைப்பையும் விளக்கும். திரிபதார்த்தம் - முப்பொருள். (பதி, பசு, பாசம்) தச காரியம் - பத்துச் செயல். 'பதி, பசு, பாசம்' என்னும்

முப்பொருள்களுள்களுள் பசுவாகிய ஆன்மா, பாசமாகிய தத்துவங்களையே தான் என மயங்கித் தன்னையும், தலைவனையும் அறியாதிருக்கும் நிலைபந்தம். குருவுபதேசத்தால், 'இத்தத்துவங்கள் சடமாதலின், நான் இவையல்லேன்' என்று அவற்றினின்றும் நீங்கி, யான்அறிவுடைப்பொருள்; ஆதலின் அத்தத்துவங்களின் வேறு' என்று தன்னை அறிந்தும், பின்னர், 'யான் அறிவுடைப் பொருளாயினும் அறிவித்தாலன்றி அறியமாட்டாமையின் சுதந்திரம்உடையனல்லேன்' என்று, 'யான் எனது' என்னும் செருக்கு நீங்கி, 'எஞ்ஞான்றும் என் அறிவுக்கறிவாய் உடன் இருந்து அறிவித்துவருபவன் இறைவனுதலின்,அவனன்றி வேறு முதல் இல்லை; அதனுல், எல்லாம் அவன் உடைமையே; எல்லாம் அவன் அடிமையே; எல்லாம் அவன் செயலே' என்று தலைவனை அறிந்து அவன் அடி நிழலில் அடங்கிநிற்றலே முத்தி. இங்ஙனம் பந்தத்தினின்றும் நீங்கி முத்தியை அடையும் வழியைப் பத்துப் படிகளாகச் சாத்திரங்கள் வகுத்துக் கூறும். அவை, ' தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிதரூபம், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் ' என்பன. இவைகளில் ' தத்துவம் ஆன்மா, சிவம் ' என்ற மூன்றிலும், ' ரூபம் ' என்பது முதலில் நிற்றலால் இந்நூற் பொருள், ' திரிபதார்த்த ரூபாதி ' எனப்பட்டது.

திரிபதார்த்தத்தில் முதல் இரண்டிலும் மும்மூன்று படியும். மூன்ருவதில் நான்கு படியும் ஆகப் பத்துப் படிகளே 'தச காரியம்' எனப்பட்டாலும், ஒவ்வொரு பொருளிலும் உள்ள படிகளை இக் குருமூர்த்திகள் பத்து அல்லது பதினென்ருக விரித்து, ஒவ்வொரு பதார்த்தத்திற்கும் ஒவ்வோர் அகவலாக, மூன்று அகவல்களால் இந்நூலை அருளிச்செய்துள்ளார்கள். பத்துப் பாடல்களை

யுடையதே, 'பதிகம்' என்று சொல்லப்பட்டாலும், பதி னொன்று பன்னிரண்டு பாடல்களையுடையனவும், 'பதிகம்' எனப்படுதல்போல. 'பதி, பசு' என்னும் இருபொருளின் படிகளைப் பதினொன்றாகக் கூறியிருப்பினும், 'தச காரியம்' என்றே சொல்லப்பட்டது.

ஒவ்வொரு பொருளிலும் சொல்லப்பட்ட பத்துப் படிகள் யாவை எனின். 'சுபாவம், வியாத்தி, வியாபகம், குணம், விசேடம், உருவகம், உருவம், சொரூபம், தரிசனம், சுத்தி' என்பன. எனினும், பசுவை உணரும் படிகளில் இப்பத்தோடுகூட 'இலாபம்' என்ற ஒன்று இவற்றுடன் சொல்லப்படுகின்றது. சிவத்தை உணரும் முறையில், 'சுத்தம்' என்ற ஒன்றை நீக்கி, 'யோகம், போகம்' என்னும் இரண்டுசேர்க்கப்படுகின்றன. எனவே 'பதி, பசு' என்னும் இரண்டன் செய்திகள் பதினொன்றாய் நிற்கின்றன. இவை பந்தத்தினின்றும் நீங்கும் முறை யாகலின், முதலிற் பாச தசகாரியமும், அதன்பின், ஆன்ம தசகாரியமும், முடிவில், சிவ தசகாரியமுமாகச் சொல்லி முடிக்கப்படுகின்றன. இவைகளை எல்லாம் இந்நூலை நன்கு ஓதியே உணர்தல் வேண்டும்.

6. சோடசகலாப்பிராசாதசட்கம்: இப்பெயரும், இந் நூலிற் சொல்லப்பட்ட பொருள் இது என்பதையும், இதன் அமைப்பையும் நன்கு விளக்கும். சோடசம் - பதினாறு. கலை - கூறு. பிராசாதம் - ஒரு மந்திரம். சட்கம் - அதனைப் பற்றிக் கூறுகின்ற ஆறு செய்யுட்களால் ஆகிய நூல்.

'சரியை, கிரியை, யோகம்' என்னும் ஞான சாதனம் மூன்றில் இறுதியாகிய யோகம், 'இயமம், நியமம்' ஆசனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி' என்னும் எட்டுப்படிகளைஉடையது. அவற்றுள், 'தியானம்

சமாதி’ என்னும் இரண்டுமே முன்னைய ஆறனாலும் அடையும் பயன்கள். அவற்றுள் தியானிக்கப்படும் பொருள் பற்றித் தியானம் பலவகைப்படும். அந்நிலையில் பிரணவத்தினைப் பதினறு கூறுகளாகக் கண்டு அவற்றிற் குரிய ஆதாரம், வடிவம், மாத்திரை முதலிய வகையில் தியானித்து, அதில் அழுந்துவதாகிய சமாதிநிலையை எய்துவது ‘பிரசாதயோகம்’ எனப்படும் பாசபந்தங்களுள் சுத்தமாயையின் காரியமாகிய நால்வகை வாக்குக்கள் பரமபந்தமாய் நிற்பன. இப்பிராசாத யோகம் அப்பந்தத் தினின்றும் நீங்குதற்குரிய சிறந்த சாதனம். ‘இப்பந்தம் நீங்கப்பெற்றால், சேவுயர் கொடியினான்றன் சேவடி சேர லாம்’ என்றுகூறுகின்றது. சிவஞானசித்தி. இந்தப்பிராசாத யோக முறையையே குருஞானசம்பந்தர் இந்நூலில் விளக்கியுள்ளார். இதன்வழி இப்பிராசாத யோகப் பயிற்சி யில் நின்றவர் பலர் தருமை ஆதீனத் திருமடத்தில் அக் காலத்தில் இருந்தனர். இக்காலத்திலும் குருமுகமாக இதனை உணர்ந்து பயன்பெறுதல் கூடுவதேயாம்.

7. முத்திநிச்சயம்: இந்நூல் இவர்கள் காலத்தில் எழுந்த ஆன்மானந்த வாதத்தை மறுத்து, சமயாசாரிய சந்தனாசாரியர்களால் சொல்லியருளப்பட்ட சித்தாந்த முத்தி இது, என்று நிச்சயித்து விளக்குதற்பொருட்டு அருளிச்செய்யப்பட்டது என்பது முன்பே சொல்லப் பட்டது. ‘இக்கருத்துப் பற்றியே இந்நூல் செய்யப் பட்டது’ என்பதை இப்பரமாசாரியர் முதலிலே,

“சந்தான நற்குரவர், தக்கோர், பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர் --- முந்நவே
எந்தமுத்தி சித்தாந்தம் என்றார்கள் சைவத்தில்,
அந்தமுத்தி நிச்சயிப்போம் யாம்”

என்றுஎடுத்துக்கொண்டு கூறியிருப்பதால் தெளிவாகிறது.

'சிற்றின்பம் சீவகுணமாவதுபோலப் பேரின்பமும் ஆன்மாவின் குணமே' என்பது ஆன்மானந்தவாதம்.

அதனை மறுத்து 'எந்த இன்பமும் ஆன்மாவின் குணம் அன்று, சிற்றின்பம் கருமத்தின் வழி மாயாகாரியப் பொருளினின்றும் வருவது பேரின்பம், அருளின்வழி சிவனிடத்தினின்றும் கிடைப்பது. அவ்வப்பொழுதுபடிகம் போலச் சார்ந்ததன் வண்ணமாய் அவற்றை அனுப விப்பதுதான் ஆன்மா' என்று விளக்கம் தரப்படுகின்றது.

"சிற்றின்பம் பேரின்பம் சிவகுணம் என்றனை நீ
உற்றின் பிரண்டும் உணர்ந்திலையோ --- சிற்றின்பம்
நாடிற் கருமபலம் நாதன்உருப் பேரின்பம்;
நீடிப் படிகம்போல் நீ"

'சங்கரனை விடாதே ஒக்க உறைத்து, இவர் அவனை, அவன் இவரைவிடாதே உடந்தையாய்ச் சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர்' என்றும், 'பரஞானத்தாற் பரனைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள்பாரார்' என்றும், 'சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்' என்றும் இவ்வாறு சாத்திரங்களெல்லாம் ஆன்மா முத்தி நிலையில் சிவனையே அனுபவிக்கும் என்று சொல்லியிருக்க, அவை அனைத்திற்கும் மாறுக, 'ஆன்மா முத்திநிலையில் தனது ஆனந்தத்தையே அனுபவிக்கும்' என்றல் பெரிதும் குற்றமாம் என்பதனை,

"உன்உருவம் கண்டிருப்பதோ! கெட்டேன்!முத்திசிவன்
றன்உருவம் கண்டிருக்கத் தக்கதே --- முன்அறிஞர்
'ஓது சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர்' எனும்
போதம் மறந்தனை இப் போது"

என்னும் வெண்பா இனிது விளக்குகின்றது.

' முத்தியில் ஆன்மா தன்னையே அனுபவிப்பதாயின்' முன்னெல்லாம் சிவனையே காணவேண்டும் என்று செய்த சாதனங்களெல்லாம் விழலுக்கிறைத்த நீராய்விடுமன்றோ என்று வினவுகின்றது,

" ஈசனையே காண எனத்தவம்முன் செய்ததெலாம்
மோசமாய் வந்து முடிந்ததே "

என்னும் வெண்பா.

'வேதம், சிவாகமம் முதலிய அனைத்து நூல்களும் சிவன் சிருவனே சச்சிதானந்த சொரூபி என்றும், ஆனந்த மயன் என்றும் ஒருபடித்தாய் முழங்க, அவற்றைச் செவிக் கொள்ளாது, ஆனந்தம் எனது குணமே என்று அகங் கரித்து நிற்றல் ஆணவத்தின் காரியமன்றோ? அதனால் இங்ஙனம் கூறுவோர் ஞானம் பெற்றோம் என்றுசொல்வன வெல்லாம் ஊனம்பெற்று ஈனநிலையில் இருத்தலே யாம்' என்ற ஒரு கருத்து.

" தானன்றி நிற்களமும் சச்சிதா னந்தனை நீ
யானென் குணம்என் இரும்பென்னே --- ஊனம்நீ
ஞானகுணம் பெற்றின்னும், 'நான் நான்' என நவிலும்
ஈனகுணம் போனதிலை யே "

என்னும் திருவெண்பாவில் அமைந்துள்ளது.

இவைபோல இன்னும் பலவற்றால் ஆன்மானந்தவாத மாகிய பிழைபட்ட கருத்தை நன்கு மறுத்து, முடிவில், ' மலத்திற் கட்டுப்பட்டுப் பெத்தத்தில் கிடந்த ஆன்மா, அக்கட்டினின்றும்நீங்கிய முத்திநிலையில் சிவனதுஆனந்த வெள்ளத்தில் மூழ்கி அவ்வானந்தமே தானாய் அழுந்தி யிருப்பதே சிவபெருமானால் அருளப்பட்டசிவாகமங்களிற் சொல்லியுள்ள சித்தாந்த முத்தி ' என்பதை,

" உள்ள மலம்அகற்றி ஓங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே --- கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தின்
சித்தாந்த முத்திஎனத் தேறு "

என்னும் வெண்பாவால் தேற்றி முடித்தருளினூர்கள்.

இந்நூற்கு வடமொழி தென்மொழிகளைக்கரைகண்ட இவ்வாதீன முனிபுங்கவர் ஸ்ரீ வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் எழுதிய, 'சிற்றுரை; பேருரை' என்னும் இரு சிறந்த உரைகள் இவ்வாதீன வெளியீடாக வெளிவந்திருத்தலின், அவற்றின்வழி இந்நூற்பொருளை இனிதுணரலாகும்.

8. நவரத்தினமாலை : 'இதன்கண் உள்ள ஒன்பது பாடல்களும் ஒன்பது இரத்தினங்கள்' என்றது உண்மையில் இரத்தினமேயாம். இப்பாடல்களில் எல்லாம் ஞானப் பிரகாசரைப் பலவகை அடைமொழிகளால் இரத்தினம் என்றே அழைத்திருக்கிறார். ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய மூர்த்திகள் தங்கள் ஞானசாரியரது பரிபூரணத்தை அறிந்து அவரது பிரிவை ஆற்றாது நின்ற ஆற்றாமையின் நிலையும், அதனால் அவர்களது ஆசாரிய பத்தியின் சிறப்பும் இதன்கண் மிகத் தெள்ளத்தெளிய விளங்கிநிற்கின்றன. அதனால் இப்பரமாசாரிய மூர்த்திகளது அருள் வரலாற்றிற்கு இந்நூல் சிறந்ததோர் அகச்சான்றாயும் விளங்குகின்றது.

இவர்கள் தம்ஆசிரியரைநோக்கி, 'தேவரீர் இம்மாயப் பிரபஞ்சத்தைப் பொய்யென்று நீக்கிப் பரிபூரணத்தை அடைந்துவிட்டீர்; ஆயினும், அடியேனை இம்மாயப் பிரபஞ்சத்தில் கிடந்துழல விட்டுச்சென்றது முறை

யாகுமோ? உம் அருளால் பிறவிக்கடலைக் கடந்து நிற்கின்ற அடியேனையும் நீர், 'வா' என்று அழைப்பது எப்பொழுது? அன்று சொக்கலிங்கேசன் ஆணை அடியேனை ஆட்கொள்ளும்படி அருளியதேயன்றி, விட்டுப் பிரியும் அருளியதில்லை; அவ்வாறிருக்க அடியேனை நீர் கைவிட்டுச் சென்ற காரணம் யாதோ? 'நம் தருமைசம்பந்தன்' என்று அடிக்கடி அன்போடு சொல்லிவரும் சொற்படி என்னைத் தருமையில் இருக்கவிட்டுப் பிரிந்தீர் போலும்! குருவாணை அதுவாயினும் அடியேன் தனிமையில் எத்துணைக் காவல் இங்கு உழலுவேன்! நீர் 'குருவாரந்தோறும் வந்து நம்மைக் காணலாம்' என்று அருளியபடி இனி அடியேன் வந்து யாரைக் காண்பேன்! அதற்கு வழிசொல்லாமற்பிரிந்தது உமக்கு அழகோ! இன்றே அடியேன் என் காயத்தைத் தொலைத்து தேவரீர் பின் வந்துவிடுவேன்; ஆயினும், தருமையிலிருந்து 'சைவ பரிபாலனம் செய்து வருக' என்பது கட்டளையாதலின்; அதனைக்கடக்கஅஞ்சிஅங்ஙனம் செய்யாதிருக்கின்றேன், இவ்வாறு அடியேன் உம்மைப் பிரிந்து தனித்திருக்குங் காலமும் ஒன்றுவந்ததே! என் செய்கேன்! என்று இன்னோரன்னவாகக் கூறுவனவற்றைக் கேட்கும்பொழுது நமது நெஞ்சமும் நெக்குருகுகின்றதன்றோ!

இத்தகைய அருட்பெருமைகள் பலவாய்ந்த இவர்களது அருள் நூல்களை ஓதி உணர்வோர், குருவருளையும், திருவருளையும் பெற்று உய்தல் திண்ணமாகும்.






உ
குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்

## 1. சொக்கநாத வெண்பா

ஆடரவஞ் சூழ்மதுரை அம்மானே, அன்பருடன்
கூடவிளை யாடிவருங் கோமானே --- நீடுபுகழ்
மென்மேலும் என்றனக்கு மேவியிடப் பொல்லாத
என்மேல் வினைகெடுப்பா யே. 1

புண்கட்டு தோலைப் புதுக்கி மயக்கமுறக்
கண்கட்டு வித்தைபோல் காட்டுவாய் --- பண்கட்டுப்
பூணுவேன் தன்னை இன்ப பூரணத்தில் பூண அருள்
தாணுவே சொக்கநா தா. 2

ஏடாரும் நாரியரை ஐயோ யமன்பிடிக்கும்
பாடா விதியென்று பாராமல் --- கேடாரப்
பூண்டஆ பாதன்என்று போடா தெனையருளில்
ஆண்டவா சொக்கநா தா. 3

காக்கைநரி ஞாளி கழுகுபரிந் துக்கிரையாம்
ஆக்கையினை யானென் றலையாமல் --- வாக்குமனம்
எட்டாத வீட்டில் எனைக்காட்டு துட்டருளம்
தட்டாத சொக்கநா தா. 4

பஞ்சமா பாதகனை ஆண்டபுகழ் பார்மீதில்
கொஞ்சமா வீறுபுகழ் கூறுமே --- வஞ்சமே
பூண்டளவில் பாதகஞ்செய் பொல்லாத நாயேனை
ஆண்டளவில் சொக்கநா தா. 5

வறிஞர் தமையொக்க வைக்குமன்னர் போல
அறிஞர் தமையாள்வ தன்றிப் --- பொறிபுலனுல்
வெம்புவேன் தன்னை விடுத்தாள்வ தேபாரம்
சம்புவே சொக்கநா தா. 6

என்னுல் உனையடைய வல்லேன் எனில்இடரில்
இந்நா ளளவும் இருப்பேனே --- பன்னுகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரை நகர்
ஆண்டவா சொக்கநா தா. 7

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய
பொல்லாக் கருத்தகற்றப் போகாதோ --- வல்லாடும்
பொங்கார வேணிப் புனிதா மதுரை நகர்ச்
சங்கரா சொக்கநா தா. 8

பேசாநு பூதி பிறக்க எனதுளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய் -- தேசாருஞ்
சிற்பரா னந்தா திருவால வாயுறையும்
தற்பரா சொக்கநா தா. 9

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரம்தா - சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா. 10

உலக வெறுப்பும் உடல்வெறுப்பும் உள்ளத்
திலகு மலவெறுப்பும் எல்லாம் - அலகிறந்த
நந்தாத இன்பசுக நாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநா தா. 11

எப்போது மும்மலம்விட் டேறுவேன் பூரணமாய்
எப்போதுன் இன்பசுகத் தெய்துவேன் - எப்போதும்
நித்தியா சுத்தா நிராமயா சொல்தவருச்
சத்தியா சொக்கநா தா. 12

காயமோ காலன் கருத்தோ மகாகாலன்
ஞாயமோ சற்றும் நடப்பதில்லை - பேயனேன்
மாளுவனே தென்மதுரை மாமணியே என்னையுகந்
தாளுவையோ சொக்கநா தா. 13

எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ
அரிஅயற்கும் வாசவற்கும் யார்க்கும் - பெரியவர்க்கும்
பூணுமே தந்தொழில்நின் பொன்னருளால் தென்மதுரைத்
தாணுவே சொக்கநா தா. 14

ஆரிடத்தில் வந்தும் அடியேன் உளத்திருந்தும்
ஓரிடத்தில் உற்பவித்தும் உள்ளபடி - பாரிடத்தில்
நாயேன் உளமகிழ நன்று உணர்த்திடுவாய்
தாயே நீ சொக்கநா தா. 15

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச் - சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா. 16

மறைஆ கமவிதியும் வந்தவுடல் தன்னின்
நிறையூழ் விதியுமுன்னு நின்றேன் - மறைவிதிக்கே
ஏற்கவே செய்வேன் இசைந்தாலூழ் வேறெதனே
டார்க்காவென் சொக்கநா தா. 17

நலம்விளைக்கும் உன்பதத்தில் நாடவைப்ப தல்லால்
மலம்விளைக்குஞ் சோறருந்த வைத்தாய் - சலம்விளைக்குஞ்
சென்னியா மாமதுரைச் செல்வாஎல் லாம்வல்ல
தன்னியா சொக்கநா தா. 18

ஆர்வந்தென் ஆர்போயென் ஐயாஉன் ஆனந்தச்
சீருளத்தே என்றுஞ் செறிந்திலதேல் - காரிருண்ட
கண்டனேஓர் புருகின்கா தல்கொண்டால் போல்மதுரை
அண்டனே சொக்கநா தா. 19

கான்றசோ ருயுலகங் காணவில்லை இன்பவெள்ளத்
தூன்றி அடியேன் உறங்கவில்லை - ஏன்ற
இருள்சகல நீங்கவில்லை ஏழையேற் குன்றன்
அருளுறுமோ சொக்கநா தா. 20

நீயே பரமசிவன் ஆனக்கால் நின்மலனே
நாயேன் உளம்மகிழ நன்ருகப் - பேயேன்
கருத்தடங்க நின்கருணை காட்டியின்ப வெள்ளம்
அருத்திடுவை சொக்கநா தா. 21

விதிமார்க்கம் எப்பொழுது மேயறியேன் ஊழின்
விதிமார்க்கம் அல்லாது மெய்யாங் - கதிமார்க்கம்
காட்டுவாய் நாயேன் கரையேற எவ்வுலகும்
ஆட்டுவாய் சொக்கநா தா. 22

அருவருப்பே மெத்தியிடும் ஆகத்தைச் சற்றும்
அருவருக்கத் தோற்றுதில்லை ஐயோ - அருவருக்கத்
தோற்றியிடா தென்னவினை துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றிவிடாய் சொக்கநா தா. 23

தவமோ சிறிதறியேன் தாரணிமேற் செய்யும்
அவமோ அளவில்லை யானல் - சிவமோ
பெறுமாறென் கூடற் பிரானேமுப் பாசம்
அறுமாறென் சொக்கநா தா. 24

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்துமுத்தி கூட்ட
மனத்துயரஞ் செய்தல் மருந்தோ - மனத்துயரம்
செய்யாமல் தீர்மருந்து சித்தா அறிந்திலையோ
ஐயாஎன் சொக்கநா தா. 25

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகை காணேன்-உணர்த்தியென்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா. 26

பிரிந்தேன் மலத்துனது பேருரளினலே
அறிந்தேன் உனைநன்கு ஐயா - செறிந்தஇன்ப
பூரண செங்கமலப் பொற்பாதா கூடல்வாழ்
ஆரண சொக்கநா தா. 27

கெடுங்காலம் வந்தால் கெடுப்பை கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை - கொடுந்தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினும் ஆரேனும்
அண்ணலே சொக்கநா தா. 28

என்னவினை நாயேற் கிருக்குதோ இக்காயத்
தென்னவினை நின்தாள் இயற்றுமோ - என்னவினை
வந்திடுமோ என்றறியேன் வந்தாலும் நின் அருளே
தந்திடுவாய் சொக்கநா தா. 29

ஆருறு தத்துவத்தும் ஆணவத்தும் கன்மத்தும்
மாருதெத் நாளும் மயங்காமல் - பேருக
நித்தனே நின்மலனே நின்பதத்தில் ஆள்மதுரை
அத்தனே சொக்கநா தா. 30

அடியேன் உனைவேண்ட அப்படியே என்றுங்
கொடியேன் கருத்திசையக்கூறி - அடியேனை
மீண்டும்பிற வா துன் விரை மலர்த்தாள் சூட்டி எனை
ஆண்டவனே சொக்கநா தா. 31

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி - நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்ற உயிர்க்கென்றும்
அளிப்பவன் நீ சொக்கநா தா. 32

ஆற்றையணி வேணி அமலனே மெய்யதனில்
நீற்றைப் புனையும் நிமலனே - கூற்றைக்
குமைத்தவனே என்சிரத்துள் கோகனதத் தாளை
அமைத்தவனே சொக்கநா தா. 33

கால வசமோ கடியேன் வினைவசமோ
ஞாலவச மோஅருளை நாடியே - கோலமறச்
சிற்பரா னந்தவெள்ளம் சேர்ந்தறிந்தும் சேர்கிலேன்
தற்பரா சொக்கநா தா. 34

நீணாள் பிறந்திறந்து நின்றதுயர் நீயறிவை
வீண் நாள் கழித்து விடாமலே - பூணஅருள்
நண்ணரிய பேரின்ப நாடி அதுவாக
அண்ணலே சொக்கநா தா. 35

ஆறாது தத்துவத்தும் ஆணவத்தும் சாராமல்
மாறாத பேரின்ப வாரிதியே - பேறாகச்
சார்ந்திருக்க வல்ல சதுரர் உளத்ததுவாய்
ஆர்ந்திருக்கும் சொக்கநா தா. 36

காடோ வனமோ கனகிரியோ காசினியோ
நாடோ சகலகலை ஞானமோ - வாடி
ஒடுங்குவதோ மெய்வீ டுயிர்க்களித்தல் போதம்
அடங்குவதோ சொக்கநா தா. 37

துன்றுபர மானந்தச் சோதியிலி ரண்டற்று
நின்றுவிட என்னை நிறுத்துவாய் - அன்று
கமலனே காண்பரிய கண்ணுதலே கூடல்
அமலனே சொக்கநா தா. 38

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ என்வினைகள்
எக்காலம் மும்மலங்கள் இற்றிடுமோ - எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோ என்னுளந்தான்
ஆனந்தா சொக்கநா தா. 39

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ - எக்காலம்
பேசாநு பூதி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநா தா. 40

வாக்கிலுரை பொய்யே மனம்நினைப்ப தும்கவடே
ஆக்கைதினம் செய்வ தகிர்த்தியமே - நோக்கில்
திரிவிதமும் இப்படிநீ செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநா தா. 41

இக்காலத் தின்னவினை என்றமைப்பை அப்படியே
அக்காலத் தவ்வூழ் அருத்திடுவை - இக்காலம்
தப்புவார் உண்டோ தமியேற்கும் தப்பரிதென்
அப்பனே சொக்கநா தா. 42

மோகாபி மானமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாபி மானம் சிதையவில்லை - ஓகோ
உனையடைந்தும் பாசம் ஒழியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா. 43

பத்திமெத்தச் சித்தம் பதியவில்லை அட்டமா
சித்தி அவாவெறுக்கச் செய்யவில்லை - முத்தியுளம்
கூடவில்லை எந்நாளும் கூடலிலே மாறிநடம்
ஆடவல்ல சொக்கநா தா. 44

என்னைவளை பாச அரண் இன்னமும்நீ கொள்ளவில்லை
அன்னையனே நீபதண மானாலும் - முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கும் ஓட்டும் அருட்சேனை
நாடியிடும் சொக்கநா தா. 45

சேகரத்தி னுச்சியின்மேல் செந்தேனுக் கிச்சித்தே
போகவசம் ஆகுமோ போகாதார் - தாகம்
மிகஅறவே யுள்ளத்தில் வேண்டிலுன்தாட் செந்தேன்
அகமுறுமொ சொக்கநா தா. 46

அடியார் பரிபாகம் எல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற் பதத்திற் - கொடுபோய்
இருத்திடுவை சேர இனிமேலாம் போகம்
அருத்திடுவை சொக்கநா தா. 47

வாழ்ஐம் மலத்தால் வருந்தி மிகஉடைந்த
ஏழையனுக் கையோ இரங்குவாய் - கோழையனுய்ப்
போனேன் புலப்பகையாற் பொன்னடியை நின்னருளால்
தானேதா சொக்கநா தா. 48

எக்காலம் தாகங்கள் இற்றிடுமோ காயங்கள்
எக்காலம் ஆசைசினம் இற்றிடுமோ - எக்சாலம்
நல்லார் குணம்வருமோ நாதாஎல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா. 49

உள்ளமுனே அல்லாலொன் றுள்ள வில்லை நின்ருெளிக்குங்
கள்ளமற நீயும் கருதவில்லை - எள்ளளவும்
நற்றவமோ செய்யவில்லை நாயேன் உனையடைதற்
கற்றதென்ன சொக்கநா தா. 50

ஆர்க்குக் கிடைக்கும் அடியேன்முன் வந்துமறைக்
கேற்கக் கருத்துக் கிசையவே - யார்க்கும்
தெரிவரியா வேதசிகை சித்தா உரைத்தாய்
அரிஅறியாச் சொக்கநா தா. 51

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போல்--செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்வார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கஞ் சொக்கநா தா. 52

எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்
நல்லாங்கு நீங்கிதென நாடறியேன் - எல்லாரும்
நீருரும் வேணி நிமலா மதுரையில்வாழ்
ஆரூரா சொக்கநா தா. 53

உரைஇறந்த பேரின்ப உல்லாச வீட்டில்
திரைஇறந்து தூங்கித் திளேயேன் - வரைபெருகப்
பேசுவேன் யான்என்றே பெற்றவர்தம் உள்ளத்துக்
காகவே சொக்கநா தா. 54

ஆரூறு தத்துவமும் அத்திலுறை மூர்த்திகளும்
பேரும் வினேவினேயும் பெந்தித்து - மாருமல்
ஆட்டுவது நீயாஞல் ஆகா மியமென்பால்
சாட்டுவதென் சொக்கநா தா. 55

மூன்அளவில் மாக்களுக்கு முத்தி கொடுத்தஅருள்
என்அளவில் சும்மா இருப்பதேன் - முன்அளவில்
சீர்பெற்ரு ரேல்உன் திருவருளொத் தாசையன்றி
ஆர்பெற்ருர் சொக்கநா தா. 59

நோயால் வருந்தியுனே நூறுகுரல் கூப்பிட்டால்
நீயாரெ ஞதிருக்கை நீதியோ - தாயாய்
அலேகொடுத்த கேழல் அருங்குழவிக் கன்று
முலேகொடுத்தாய் நீயலவோ முன். 57

தாயர் மகவருத்தஞ் சற்றுந் தரியார்கள்
ஆயவினேக் கீடா அமைத்தாலும் - காயம்
பரிக்குந் துயரமெல்லாம் பார்க்கவுனக் கென்றும்
தரிக்குமோ சொக்கநா தா. 58

தீவினேயால் இன்னமுன்னம் தேகமுறச் செய்வையோ
தீவினேயாற் றுன்மயமாய்ச் செய்வையோ - தாவிதமாய்
இன்னபடி மேல்விளேவ தென்றறியேன் ஈதறிந்த
அன்னேயே சொக்கநா தா.

என்னதியான் என்பதுவும் யான்பிறர்செய் தாரெனலும்
மன்னுமதி பாதகமேல் வாஞ்சைகளும் - இன்னமின்னம்
சொல்லுகின்ற இச்செயல்நீ தூண்டுதலற் றென்செயலால்
அல்லவே சொக்கநா தா. 60

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம் - பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா. 61

எல்லாம் உனதுபதம் எல்லாம் உனதுசெயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால் - பொல்லாத
மாதுயரம் நீங்கும் மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநா தா. 62

தீதாம் அவா நந்தச் செய்மதுரை வாழ்வேந்தா,
நாதா! சிவானந்தம் நல்குவாய் - வேதச்
சிரகரா, நித்தா, திரபரா, சுத்தா
அரகரா சொக்கநா தா. 63

மற்றொருவர் தஞ்சமின்றி வந்தடைந்தக் கால்எனை நீ
சற்றுமிரங் காதிருக்கை தன்மையோ - கொற்றவா
பாவலா, கூடற் பரமா பரதேசி
காவலன்நீ தானனைக் கால். 64

தன்னந் தனியே தமியேன் முறையிட்டால்
இன்னந் திருச்செவியில் ஏறாதோ - மன்னவனே
தென்மதுரை மேவித் திருந்தியசெங் கோல்செலுத்துந்
தன்மதுரை நீயலவோ தான். 56

என்போல் மலகடினர் எவ்விடத்துங் கண்டதுண்டோ
இன்பே மதுரைக் கிறைவனே - அன்பேதும்
இல்லா தெனையாண்ட எண்ணத்தால் தேவரீர்
எல்லா மும் வல்லசித்த ரே. 66

நீயே யொளித்திருப்பை நீஎன்றுங் காணுமல்
நீயே யொளித்தபடி நின்னருளால் - நீயேதான்
காட்ட அன்னியமாக் கண்டேன் உனதுவினை
யாட்டதென்ன சொக்கநா தா. 67

பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் - பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா. 68

இட்டா சனத்தில் இரவுபக லற்றிடத்தில்
முட்டா திருக்க அருள் முற்றுந்தா - அட்டாங்க
யோகந்தான் நீங்கி ஒழியாச் சிவானந்த
ஆகம்தா சொக்கநா தா, 69

மோகங் கரைய முழுதும் மலம்கரைய
ஆகங் கரையஅறி வானந்த - மேகமாய்ப்
பூரணமாய் எங்கெங்கும் பொங்கி எழவிழித்த
ஆரணனே சொக்கநா தா. 70

ஊனது வானவுட லோடும்அணு காமலருள்
ஆனசிவ போகமது வாயருள்வாய் - ஞானக்
கரும்பொருளே வாழ்மதுரைக் கண்ணுதலே ஆர்க்கும்
அரும்பொருளே சொக்கநா தா. 71

பூண்டமலம் மாண்டுவிடப் போந்தசிவா னந்தவெள்ளத்
தாண்டுமெனே மீண்டுவிட லாகுமோ - நீண்டமால்
வீரென்பார் தாரா விமலா எனக்கண்டார்
ஆரென்பார் சொக்கநா தா. 72

முன்னை மலமகற்றி மூதறிவா னந்தமயந்
தன்னை யறிந்த தபோதனருள் - என்னையுநீ
ஆண்டுபரிச் சொக்கநா தாந்தமருள் கூடலிலே
தாண்டுபரிச் சொக்கநா தா. 73

கருணை நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே - ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா னந்தமே
ஆங்காண்நீ சொக்கநா தா. 74

நீரிலே மூழ்கிலுமென் நித்தமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் பணியிலுமென் - வேரிலே
உற்றிருந்தா லன்றோ உயிர்க்குறுதி ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா. 75

என்செயலே என்றென் றியற்றுவதும் என்செயலும்
உன்செயலே என்றென் றுணர்த்துவதும் - நின்செயல
தாகுமே என்ன அடியேற் குணர்த்தலும் நீ
ஆகுமே சொக்கநா தா. 76

ஈண்டுபெனை ஆண்டிலையேல் என்வினைக்கீ டாயானே
வேண்டும் பவங்களில்நீ விட்டாலும் - பூண்டருளால்
அங்கங்கே என்னோ டனனியமாய் என்னுருவில்
தங்கியருள் சொக்கநா தா. 77

உன்னைவிட நீங்குமுயிர் ஒன்றில்லை ஆதலினுல்
என்னைவிட நீங்குவதும் இல்லைநீ - பொன்னைவிடப்
பூந்தேன் அலருடையா யாய் பொங்குமது ராபுரியில்
வேந்தே பிரியா விடை. 78

அன்பர்க் கருள்புரிவ தல்லாமல் தேவரீர்
வன்பர்க் கருள்புரிய மாட்டீரேல் - உம்பர்தொழு
நல்லார் புகழ்மதுரை நாதரே தேவரீர்க்
கெல்லாமும் வல்லசித்த ரேன்? 79

நரகம் இனி நாட நாடோம் உமையாள்
விரகர் தமிழ்மதுரை மேவித் - துரகநரி
ஆக்கினர் வைகையில்நீர் ஆடினேம் அவ்வெல்லைப்
போக்கலாம் யாம்திரிந்திப் போது. 80

நானே தனுகரணம் நானே மலமாயை
நானே இவைகள் நடத்துவது - நானேதான்
பூண்டவினை அறுப்போன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா. 81

அரும்பாச நன்மைதின்மை ஆகம் அதன்மேல்
விரும்பாது நிட்டையிலே மேவித் - திரும்பாத
மானந்தா என்னறிவில் மாருது பொங்கிஎழும்
ஆனந்தா சொக்கநா தா. 82

துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தார் இட்டத்தார்
அஞ்சச் சலிக்க அருவருக்கக் - கொஞ்சமுற
வந்த தனுஇருந்து வாழ்ந்துநான் என்னவைத்த
தந்திரமென் சொக்கநா தா. 83

தனுவாதி ஆக்கிஉயிர் தன்னிலிசைத் தாட்டி
எனுமாக மம்கருணை என்றுந் - தினமும்நீ
ஆச்சரியம்யான் எனதென் ருட்டல்மறந் தொன்றுரைத்தல்
ஆச்சரியம் சொக்கநா தா. 84

தேகாதி எல்லாஞ் சடம்பிணம்பொய் என்றிருக்க
மோகாதி எல்லாம் முடிந்திருக்க - ஏகமாய்
எப்போதும் இன்பவெள்ளத்தேயிருக்க வாழ்வைஎன்னுள்
அப்போதே சொக்கநா தா. 85

நின்பாடல் என்று நினைப்பாடல் அன்றியே
என்பாடல் எங்கே இறைவனே - நின்பாடல்
ஆமே தனுவாதி ஆகமநால் வாக்காதி
யாமேநீ சொக்கநா தா. 86

நீயியற்ற ஓர்பொருளை நிச்சயித்த நாயேனும்
போயியற்றல் செய்யப் புரிகுவேன் - நீயியற்றல்
ஆக்கா தணுவும் அசையுமோ அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா. 87

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்
கென்றுநீ நன்மைசெய்வ தன்றிநான் - ஒன்றேனுஞ்
செய்யுமா றெங்ஙன் சிவனே இனிநாயேன்
உய்யுமா றெங்ஙன் உரை. 88

அறிவுபரம் ஆனந்த மாகவில்லை ஆகம்
பொறிகரணம் யானெனதும் போக - நெறிதவஞ்சேர்
பேரன்போ இல்லை பினை நான் உனக்கடிமைக்
கார்என்பேன் சொக்கநா தா. 89

நின்னளவி லானந்த நின்கருணை சற்றேனும்
என்னளவில் தோற்று திருந்தக்கால் - நின்னளவில்
பூரணம்பொய் ஆனந்தம் பொய்கருணை பொய்உரைத்த
ஆரணம்பொய் சொக்கநா தா. 90

தேவேமதுரை நகர்ச் சிற்பரனே எவ்வுயிர்க்குங்
கோவே எனையாளுங் கோவேஎன் - நாவே
உனைத்துதிக்கச் சிந்தை உனை நினைக்கச் சென்னி
கனத்தில் உனைவணங்கக் காண். 91

உன்னைச்சிங் காரித் துனதழகு பாராமல்
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன் - பொன்னை
அரிவையரை யேநினையும் அன்பிலேற் குன்தாள்
தருவையோ சொக்கநா தா. 92

சொக்கநா தாஉனையே சொல்லுமடி யேனுடைய
பக்கமாய் நின்றுவினை பாற்றியே - எக்காலும்
மீண்டுவா ராதகதி மேவுவிப்பாய் தென்மதுரைத்
தாண்டவனே சொக்கநா தா. 93

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை - எக்காலும்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேநின் தாளே துணை. 94

சொக்கநாத வெண்பா முற்றிற்று.

# 2. சிவபோகசாரம்

## 1. அடிகள் வணக்கம்

சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன் - முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நம்குருநா தன். 1

அருவும் உருவும் அருவுருவும் அல்லா
ஒருவ னுயிர்க்குயிரா யோங்கித் - திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான். 2

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும் - பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனு னல். 3

அரியயற்கு முன்னாள் அடிமுடியுங் காணாப்
பெரியவனே வந்து பிறந்து - துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச னாகி
இருக்கின்றா னூரில் இன்று. 4

கண்டேனிப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன் - வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான். 5

உள்ளிருந்தே யென்று முணர்த்துகினும் கண்டிலரென்(று)
உள்ளும் புறம்புமா வோமென்று - மெள்ள
நரருருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். 6

இருளுதய நீக்கும் இரவியைப்போல் என்னுள்
அருளுதய நன்றா யருளி - மருளுதயம்
மாற்றியவன் ஆரூரன் மாமறையும் ஆகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். 7

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே - அழியாத
பூரணா! செங்கமலப் பொற்பாதா! தென்கமலை
ஆரணா! நாயேற் கருள். 8

தேடுந் திரவியமும் சிற்றறிவும் பற்றுதலும்
கூடும்பொய் என்றருளிற் கூட்டினன் - நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். 9

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ
[லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய் -
[மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னிஎன்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். 10

## 2. பெறுதற் கருமை

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கிஎன்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை - பெருமை இடும்(பு)
ஆங்காரங் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. 11

தன்பெருமை யெண்ணுமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை - தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியு நாள். 12

உரையிறந்தால் உன்னும் உணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை - வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாப்
பூசிப்ப தும்சுத்தப் பொய். 13

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக் - குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணுப் பொருள். 14

ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும் - குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம். 15

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய் - இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. 16

## 3. அறியும் பகுதி

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே - மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம். 17

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி இன்ப சுகமாய்ச் - சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தைஅகன்
ருனந்தம் ஆதியிலா தான். 18

இந்தனத்தில் அங்கி எரிஉறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் - சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை, 19

ஆருறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
வேருக நின்றஇடஞ் சொல்லின் - மாரு
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகாண் நீயே புணர். 20

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்தில் கண்டு - நனவாதி
தோற்றிடும்போ தந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவர் என்றும் மலம். 21

தத்துவங்கள் எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்கள் ஏதென்னின் சாற்றக்கேள் - மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்தில் தோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே. 22

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் - பேறாகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும். 23

## 4. உபதேச விளக்கம்

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்தே - திரமாக
நில்என்றான் கண்டஎல்லாம் நேதிபண்ணி மும்மலமும்
கொல்என்றான் ஞான குரு. 24

காயம் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயஇருள் மாயை அதுஎன்றால் - தூயபொருட்
போதனே! செங்கமலப் பொற்பாத னே! எனைநீ
ஏதென்று சொல்லாய் இனி. 25

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்தமும் - என்னைஉன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். 26

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம் - பொங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார். 27

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லவங்கள்
நங்கமலை வாழ்கிளியே! நாடிக்கேள் - சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதன் தத்துவத்தைக் காட்டிஅருள்
தத்துவத்தைக் காட்டியது தான். 28

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன் - பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினான் கூட்டினான் காண். 29

நானிங் காய் நீயங்காய் நாட்டமற வைத்ததற்பின்
நானெங்கே நீயெங்கே நாதனே! - வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ உன்னறிவில்
நன்றாகத் தோன்றுசுகம் நாம். 30

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே
நிலைபெற் றிருந்தசுக ஞேயம் - மலைவற்
றிருந்ததுகண் டாயே இருந்தபடி அத்தோ(டு)
இருந்துவிடெப் போதும் இனி. 31

அகத்தை இழந்தருளாய் அவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான் - மகத்தான
சிற்பரனா ரூர்தனில்வாழ் செங்கமலப் பொற்பாத
தற்பரஞா னப்பிரகா சன். 32

கிட்டாத ஈசனைக் கிட்டி அருள்புரிந்த
நிட்டாநு பூதி நிலையிலே - முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வரும் இன்ப பூரணமா வை. 33

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா - அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளினாலே
இருந்தபடி யேகண் டிரு. 34

இற்றை வரைச் கர ணத்தோ டிணங்கினையே
இற்றைவரைச் சென்மம் எடுத்தனையே - இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யீதறநல்
இன்பவெள்ளத் துள்ளே இரு. 35

தேகாதி நானல்ல என்றறிந்தால் சித்தமயல்
போகாத தென்னையோ புண்ணியா - தேகாதி
தன்னளவே அம்மயக்கம் சத்தியமாய் எப்பொழுதும்
உன்னளவே இல்லை உணர். 36

ஆருறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே
ஆருறும் கண்டறிவன் ஆயினையே - மாருமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். 37

மாதா பிதாச் சுற்றம் என்று மயங்கினையே
நீதான் தனுவாகி நின்றனையே - ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரண னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனையே மெய். 38

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையில் அழுந்தி விடாதே - உனை இழந்து
காணுமற் கண்டானைக் காட்சி யறக்கலந்து
பூணுமல் எப்பொழுதும் பூண். 39

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்த இராப்பகலா
மெத்தவத்தை நாடி விடுவையேல் - சுத்தவத்தை
தானுய் இரண்டுந் தவிர்ந்த சிவானந்த
வானுவை நீயே மதி. 40

சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள் தொல்லைவினைத்
தத்துவங்கள் ஆறாறுந் தாம்பெருகக் - கத்திடுவர்
எல்லாம் இழந்த இடமே அதுவாக
நில்லாய் அதுவே நிலை. 41

நெருப்பென்றால் வாய்சுடுமோ நெய்பால்தேன் கட்டி
கருப்பென்றால் தித்தியா காணீ - விருப்பமுடன்
நீபிரமம் என்றக்கால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமம் சற்குருவால் நில். 42

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை - யார்க்கும்
தெரியாப் பரப்பிரமஞ் சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பர நா தா. 43

## 5. அநுபூதி நிலை

உள்ளங் கரைய உடல்கரைய ஆனந்த
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக் - கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கொலோ
ஐயா தியாகவினோ தா. 44

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் - மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே. 45

மாயைமலம் எங்கே மறைந்ததோ ! மாயைதனில்
ஆயசகம் எங்கே அழிந்ததோ ! - காயமதில்
தங்கும் புருடனெங்கோ ! சச்சிதா னந்தவெள்ளம்
எங்கு மிகக்கோத்த தே. 46

நானுஞ் சுகவடிவாய் நண்ணினேன் நின்னருளால்
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே - வானுஞ்
சுகரூப மன்றுமண ந் தோற்றநிலம் போலுன்
அகரூப மட்டே அது. 47

ஈசன் அடியில் இருக்கை யிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே - பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் தன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான். 48

நற்பதஞ்சேர் ஆரூரின் ஞானப்ர காசனெந்தை
தற்பரனோர் ஞானவாள் தந்தானே - சொற்பனத்தும்
காரார் மறலிஅயன் கண்ணனுக்கும் அஞ்சேனை
யாராலும் என்செய்ய லாம். 49

வெறும்பாழிற் பேரின்ப வெட்டவெளி தன்னில்
குறும்பாளர் காணக் குடிலின் - உறும்பாசம்
ஒட்டிஎனை வைத்தனனே உற்றபிர பஞ்சமெலாம்
ஆட்டியஞா னப்பிரகா சன். 50

என்றுஞ் சிவத்தோ டிணைபிரியா தேயறிவாய்
நின்றபடி தன்னை நிகழ்த்தினான் - மன்றில்
நடமாடும் ஆரூரன் ஞானப்ர காசன்
திடமாக என்னுள்ளத் தில். 51

நாதனார் தென்கமலை நாயனார் எவ்வுயிர்க்கும்
போதனார் செங்கமலப் பொற்பாதர் - பேதமற
ஒன்றிரண்டு தான்றவே உண்மையிலே கூட்டிஎனை
இன்றறவே வைத்துவிட்டா ரே. 53

நன்னெஞ்சே நீகெட்ட தன்மையெலாஞ் சொல்லுதற்குக்
கன்னெஞ்ச மாலயனுங் காணுதோன் - வன்னெஞ்சர்
இன்னகுறை உண்டென்னா ஈசன் எதிர்வந்தால்
என்னகுறை சொல்லாய் இனி. 53

இட்டசனம் எங்கே இதமகிதந் தானெங்கே
துட்டசனம் எங்கே குன்றாச் சிவானந்தம்
கூடி யிருந்ததெங்கே குன்ருச் சிவானந்தம்
நாடியது வாயிருந்த நாள். 54

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே - வாக்குமனக்
காயம் உடனிழந்து காண்ஞா திருஞான
ஞேயம் இழந்த நிலை. 55

புசிப்போம் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம் - முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோம் எமக்கார் சரி. 56

## 6. உபாய நிலை

அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநான் என்றென்று சேர்ந்தால் - அறிவு
தெரிந்திடுமோ இன்பசுகஞ் சேர்ந்திடுமோ நின்னைப்
பிரிந்திடுமோ சென்மப் பிணி. 57

அரணங்கள் தாம்எரித்த அத்தரே என்னுள்
கரணங்கள் ஓட்டும்வகை காட்டீர் - காணங்கள்
நீஅதுவாய் நில்லாமல் நின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம். 58

தானல்லா தத்தனேயுந் தா வென் றுழலாமல்
தானெல்லா மாயதனுள் தாக்காமல் - தானெல்லாம்
ஆனேம் எனுப் போதந் தாக்காமல் ஈசனிடத்(து)
ஆனேனே ஆயினவ னும். 59

தேகநாம் என்றென்று செப்புவீர் ஈதில்வரும்
கோகநாம் என்று புலம்புவீர் - நோக
வருந்துவீர் தீவினையின் மாருத இன்பம்
பொருந்துவீர் எப்படிநீர் போய். 60

தன்னே இழந்திடத்தே தானே சுகவடிவாய்
இன்னபடி என்றறியா எங்கோனுட் - பின்னமற
ன்றநிலே தானுந் தெரியாதே நின்றவர்கட்(கு)
அன்றே பிறப்பறுக்க லாம். 61

உன்னுதே பற்றா துரையாதே யொன்றிஅதில்
நின்னாமம் இல்லே நிகழாதே - பன்னாட்
பரையிறந்து நிற்கும் பயனணேந்தார் நெஞ்சில்
திரையிறந்து நிற்கும் சிவம். 62

அருளறிந்து தானாம் அறிவறிந்தே ஆங்குட்
பொருளறிந்து தானடங்கிப் போத - இருளகல
விம்மா திருந்து விகற்பமற ஒன்றாகியச்
சும்மா இருக்கை சுகம். 63

செறியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற
அறிவை அறிவால் அறிந்தே - அறிவிழந்து
நின்றால் சுகானந்த நீடு நிலேவேறு
சென்றால் சுகங்கிடையா தே. 64

தத்துவத்தை விட்டருளிற் ருன்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகஅழுத்திச் - சுத்தமாய்
ஒன்றாகி நின்ற உணர்வும் ஒழிந்தக்கால்
அன்றோ சிவபோக மாம். 65

சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர் - இட்டமுடன்
யோக சமாதிகளும் உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர். 66

நின்னறிவில் யானொளித்து நீயாகி நின்றதுபோல்
என்னறிவில் நீ யொளித்தே யானாகிய - எந்நாளும்
நிற்கவல்லை யாமாகில் நின்சனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லை காண். 76

இன்பசுகத் துள்ளே இருக்கலாம் எப்போதும்
துன்பவினை உன்னைத் தொடராது - வன்பா
மருட்டேக மாயடங்கி மாயாமல் நெஞ்சே
அருட்டேக மாயடங்கு வாய். 68

தேக மறந்து திருவருளாய் நின்றுசிவ
போகம் விளையப் புணர்நெஞ்சே - நோக
வருந்தாமல் தீவினையின் வாடாமல் துன்பம்
அருந்தாமல் நீ பிறவா மல். 69

பூதாதி பாசமன்றோ பூரண னந்தமன்றோ
பேதமற நம்முட் பிரானன்றோ - வாதனைகள்
விட்டால் சுகமன்றோ என்றுணர்வில் வேண்டுவதுங்
கெட்டால் பிறப்பும் கெடும். 70

அழுந்தாதே பாசத் தனுதினமும் ஐயோ
விழுந்தால் எழுந்திருக்க வேண்டும் - செழும்பாகை
மீறித் தருமிரத வீட்டின்ப மாமலைமேல்
ஏறித் திரும்பலா மே. 71

என்றுஞ் சனனத் திடர்க்கடலி லேமுழ்கிப்
பொன்றுமன மேஉனக்கோர் புத்திகேள் - நன்று
தனிச்சங்கஞ் சேராமல் தற்பரனைச் சேரில்
இனிச்சங்கஞ்சேரா திரு. 72

## 7. பணியறுத்தல்

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மானால் - அவ்ரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென்?நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண். 73

எங்கே நடத்துமோ எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன் - கங்கைமதி
சூடினான் தில்லையிலே தொந்தொமென நின்றுநடம்
ஆடினான் எங்கோன் அருள். 74

போகம் புவனம் பொருந்துமிடம் எங்கெங்கும்
தேகம் கரணந் திரியுமே - யாகிலது
தன்னை நீ யென்று தவியாதே நெஞ்சமே
நின்னையே கண்டருளில் நில். 75

ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித் திருந்திடினும் · மாதேவன்
காட்டிடுவ தானவருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட. 76

எடுத்தஉடற் கேய்ந்தகன்மம் எப்போதும் ஊட்டும்
விடுத்துவிட்டோம் என்பர் விழலர் - விடுத்த
ததுவென்றே ஐந்துமலம் ஆறாறும் நீத்த
இதுவன்றோ யாம்துறவென் பேம். 77

எவ்வுயிருஞ் சாக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ - வவ்விப்
பொருகுவதும் நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதும் தானே வரும். 78

முப்பதுஞ்சென் றால்விடியும் முப்பதுஞ்சென் றாலிருளும்
அப்படியே யேதும் அறிநெஞ்சே - எப்போதும்
ஆங்காலம் எவ்வினையும் ஆகும் அதுதொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம். 79

ஆவலுற்றி டுஞ்சகலத் தாவதுவும் ஆங்கவரே
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவும் - நா அரற்றல்
இல்லாத சுத்தத் திருப்பதுவும் இம்மூன்றும்
இல்லான் செயலென் றிரு. 80

பாசஞ் சடம்உயிரோ தானாகப் பற்றறியா(து)
ஈசன் இரண்டும் இணைத்தாட்டிப் - பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பிஅருள் செய்யாமல்
உய்பவர்கள் உண்டோ உரை. 81

முற்றின்ப மாம்அருளின் மூழ்குவதும் மோகமிகு
சிற்றின்ப மாமருளிற் சேர்குவதும் - உற்றிங்(கு)
அறிந்தான்ன் நெஞ்சே அகிலாண்ட மெங்குஞ்
செறிந்தான்செயலே தெளி. 82

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றால் யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே - என்னிடத்தில்
இன்மை உயிர்க்குயிர்நீ யின்மை இருந்தியற்றின்
நன்மைதின்மைக் கேதுவோ நான். 83

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்று மறை சாற்றியிடும் - நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். 84

கட்டமாங் காயம் கலையனைத்தும் கற்றாலும்
அட்டமா சித்தி அடைந்தாலும் - இட்டம்
பரம சுகமே பதியாத போது
திரம சுகமே தெளி. 85

மனவாக்குக் காயமுயிர் மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும் - நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன். 86

முன்னைவினைக் கீடா முதல்வன் அருள்நமைக்கொண்(டு)
என்னவினை செய்ய இயற்றுமோ - இன்னவினை
செய்வோம் தவிர்வோம் திரிவோம் இருப்போம் இங்(கு)
உய்வோம் எனும்வகையேது. 87

ஊட்டும் வினையிருந்தால் உன்னாணை உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும் - கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே என்றென்(று)
எரியாதே நெஞ்சே இரு. 88

என்னதன்று நின்செயலே என்றறிந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன் ஈசனே - இன்னமின்னம்
எப்படியோ நாயேனை ஈடேற்ற வேண்டுமுனக்(கு)
அப்படியே செய்தருளு வாய். 89

வன்மைபுரி காய மரப்பாவை தன்னை அரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தால் கட்டியே - நன்மைதின்மை
ஆட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போல் உண்டோ நகை. 90

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
பேறாக ஆனந்தம் பெற்றாலும் - வேறாகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து. 91

ஆனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகள்தாம்
யானெனதென் றெண்ணி இயைந்திடினும் - தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்மம் இலே. 92

சத்துருவும் மித்துருவும் தாரணியில் வேறில்லை
சத்துருவும் மித்துருவும் தன்னெஞ்சே - பெத்தமலம்
விட்டும் படிக்கு வினைக்கீ டுனைத்தனுவோ(டு)
ஆட்டுஞ் சிவனென் றறி. 93

இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனால் எய்தும்என அறிந்தே - அன்னவினை
அன்ன தலத் தன்னபொழு தன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான். 94

அன்றே அநாதி அமைத்தபடி யல்லதொன்(று)
இன்றே புதிதாய் இயையுமோ - என்றுஞ்
சலியா தியற்றுவான் தன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு. 95

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்உறவர் ஆர்பகைஞர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொரூபர் - பேர்பெரியர்
எங்கெங்குந் தாமாய் இருந்துசட சித்தனைத்தும்
அங் கங் கியற்றுவதா னல். 96

நன்கருத்தே தென்கமலை ஞானப்ர காசனே
என்கருத்தே உன்கருத்தென் றெண்ணுமல் - உன்கருத்தே
என்கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெல்லாம்
உன்கருத்தே தீரவறி யும். 97

அமைத்தவினைக் கீடா அனுதினமுஞ் செய்வ(து)
இமைப்பொழுதும் வீண்செயலொன் றில்லை - உமைக்குரி
எல்லாம் அறிந்தெங் கியற்றுவதும் தன்னடிமை [யான்
வல்லார் தமக்குணர்த்து வான். 98

கள்ள அரனே கருணையுடன் என்னறிவில்
உள்ளசுகந் தந்துவிட ஒண்ணுதோ - மெள்ள
வருத்துவதும் தீவினையில் வாட்டுவதும் ஞானம்
பொருத்துவதும் ஏன்தான் புகல். 99

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தாளக்கி
மீளா தளித்தபர வீட்டிலெனை - யான
உனக்குப் பொறியோ உனைத்தொடர்ந்தா லென்ன
எனக்குப் பொறியோ இனி. 100

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம் - நம்மால்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு. 101

பொல்லாத தீவினையிற் போகார்கள் போனாலும்
எல்லாஞ் சிவன்செயலே என்றிருப்பர் - நல்லார்கள்
நற்றுங் கமலையில்வாழ் ஞானப்ர காசனருள்
சற்றும் பிரியா தவர். 102

கூட்டுவதும் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்றொன்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும் காட்டுவதும்
காட்டி மறைப்பதுவும் கண்ணுதலோன் முன்னமைந்த
ஏட்டின் படியென் றிரு. 103

உள்ளதுதான் போமோமற் றில்லா ததுவருமோ
பள்ளமே வெள்ளம் பரவாதோ - கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே
செத்துப்போ னானோ சிவன். 104

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம் - ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானானால்
நோக்குவதென்! யாம்பிறரை நொந்து. 105

தேசம் சிவாலயங்கள் சேர வலையொரு
மோசம் வந்ததையோ முதல்வனே - தேசத்து
மன்னைவெறுப் பேனோ வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ உரை. 106

## 8. துறவின் பகுதி

துரத்திஉன்னை ஆசை தொடராமல் என்றும்
விரத்தியினால் ஆங்கவற்றை விட்டுப் - பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய். 107

அனைத்துலகும் நம்பால் அநுக்கிரகம் பெற்றென்
அனைத்துலகு நம்வசமாய் ஆயென்? அனைத்துலகும்
கொண்டாடில் என்னைவினைக் கொத்தறுத்துப் பேரின்பம்
கண்டாடில் அன்றோ கதி. 108

அறிவிழந்து நின்றசுக ஆனந்தத் துள்ளே
குறியிழந்து நின்று குலாவிப் - பிறியா (து)
இருந்தால் பிறப்பறுமோ? விச்சைமால் கொண்டு
திரிந்தால் பிறப்பறுமோ? செப்பு. 109

எத்திசையும் எவ்வுலகும் எத்தொழிலும் எப்பயனும்
நித்தியமென் றெண்ணில் நிலையாதே - புத்தியினுல்
கண்ணுடி யில்தோன்றி மாய்ந்துவிடுங் காண்இவற்றைக்
கண்ணுடி யிற்கனவிற் காண். 110

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புறா - சித்தமே
மெய்யாகத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்ருத போது. 111

மின்போலத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
என்போ லிகள்திரமென் றெண்ணுவார் - தன்போதம்
இல்லார் சிவபோகம் என்றும் அருந்தியிடு
நல்லார் திரம்இதுவென் னார். 112

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே அலையாதே - நேசம்
பொருப்பானை நின்னறிவிற் போக்கு வரவற்(று)
இருப்பானைப் பார்த்தே இரு. 113

ஆகம் பகையாவ தன்றிப் பகையுண்டோ
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்(கு) - ஏகன்
இருவர் அறியாத ஈசனருள் அல்லால்
ஒருவர்துணை உண்டோ உரை. 114

அளவிலாச் செல்வத் தடைந்தாலும் ஆகத்
தளவிலாச் சித்திகளுண் டாயும் - அளவில்கலை
ஆய்ந்தாலும் என்னைசுக ரல்லார் சிவானந்தத்
தோய்ந்தார்கள் அன்றோ சுகர். 115

ஆகாத காரியம்செய் தாஞ்சுகமும் ஆங்கதனல்
போகாத துக்கம் பொருந்துவதும் - ஓகோ
உரைக்கிலணு வுக்கும் உயர்ந்தமா மேரு
வரைக்கும் நிகரா மதி. 116

பொய்யில்வருந் துன்பம் புகுந்தறிந்தும் பூரணமா
மெய்யில்வரும் இன்ப விளைவறிந்தும் - ஐயோ
தெளியாத தென்னநலந் தீங்குகண்டு சற்றும்
களியாத தென்னமயக் கம். 117

ஆகம் சிறைச்சாலை அக்கரணம் காவலாள்
போகம் புவனம் பொருந்துமிடம் - ஓகோ
இதனுட் படுமுயிர்கட் கீடேற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன். 118

அதிட்டானம் ஈசன் அருளன்றி மற்றை
அதிட்டானம் எல்லாம் அநித்தம் - அதிட்டானம்
பொய்யென் றறியாமல் பூதலத்து நெஞ்சமே
மெய்யென் றுழல்வதெல்லாம் வீண். 119

நின்னை மதிக்கின் நினக்கதிகர் செல்வநினை
நின்னை வறிஞனென் நினையின் - நின்னிற்
சிறியார் வறுமைநினை சிந்தைபுக என்றும்
குறியா இடும்பைதுக்கம் கோள். 120

## 9. அறிவோர் புகழ்ச்சி

அநித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவார் - தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்தில் மூழ்கி மலத்தைஅறுத்
தானந்த மாயமுந்து வார். 121

தாக மறந்து சதுர்மறந்து நான்மறந்து
தேகமறந் தட்டமா சித்திமறந் - தாகத்தின்
வந்ததறி யாதிருந்து மாறாச் சிவானந்தம்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி. 122

உள்ளமல நீங்கி ஒழியாச் சிவானந்த
வெள்ளந் துளைந்து விளையாடும் - பிள்ளைகாள்
அத்துவித மானீர்நம் மாகம் பிரிந்தோமென்(று)
இத்துவிதம் எண்ணுவா னேன். 123

அறிவாய் அறிவிழப்பில் ஆகின்ற இன்பச்
செறிவாய்ச் சுகமாய்த் தினமும் - பிரியா(து)
இருந்தங் கதீதமாய் ஏய்ந்தசிவா னந்தம்
பொருந்துவார் முத்தரெல்லாம் போய். 124

## 10. மடவோர் பழிப்பு

தனையறியார் ஈசன் தனையறியார் பாச
வினையறியார் ஆனந்த மேவார் - தனையறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பர் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில். 125

தன்னை அறியார் தலைவன் தனைஅறியார்
முன்னை வினையின் முடிவறியார் - பின்னைக்
குருக்களென்றும் பேரிட்டுக் கொள்ளுவர்கள் ஐயோ
தெருக்கள் தனிலே சிலர். 126

வாயுவெளி தானசையா வாறிருந்தாற் போலென்று
நீயதுவும் பூரணமாய் நிற்கவே - காயத்துக்
குள்ளுள்ளே தான்சிவமென் றுற்றுப்பார்ப் பாய்ஊசிப்
பொள்ளலால் வான்பார்ப்பார் போல். 127

கற்கஇடர்ப் பட்டுமிகக் கற்றஎல்லாங் கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ - நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ. 128

அறியார் கனவினிலும் ஆனந்த ரூபம்
அறிவார் நமையும் அடையார் - அறிவார்கட்(கு)
இல்லாத தீங்கே எடுத்துரைப்பார் இவ்வுலகில்
பொல்லார் தலையிற் பொறி. 129

## 11. பொதுநிலை

நீதியிலா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும் பூரணமாம் - சோதி
கழலறியா ஆசானும் கற்பிலரும் சுத்த
விழலெனவே நீத்து விடு. 130

ஐந்தறிவாற் கண்டாலும் ஆர்ஏது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப் பேய்ந்தாலுஞ் - சிந்தையே
பார விசார த்தைப் பண்ணாதே ஏதொன்றும்
தீர விசாரித்துச் செய். 131

பரபரக்க வேண்டா பலகாலுஞ் சொன்னேன்
வரவரக் கண்டாராய் மனமே - ஒருவருக்கும்
தீங்கு நினையாதே செய்ந்நன்றி குன்றாதே
ஏங்கி இளையா திரு. 132

மிகுத்தகுலஞ் செல்வத்து மேவுவதும் அத்தை
பகுத்தும்பொய் யென்றுவிடும் பாங்கும் - தொகுத்து
உரித்தால்நல் நெஞ்சே மிகுவா ரணத்தை
உரித்தான் செயலென் றுணர். 133

ஆறாறு தத்துவம்வைத் தத்திலுறை மூர்த்திகள்வைத்(து)
ஏறா மலபாகம் ஏறவே - மாறாமல்
உன்னைவிடா தாள்வான் உனைக்கேட்டோ நெஞ்சமே
என்ன விசாரம் எமக்கு. 134

தானோ அசத்தல்ல என்றறிந்தால் தாரணியில்
ஏனோ பிதற்றிடுவ தேழைநெஞ்சே - தானே
இறவா ததுதான் இறக்க அருளை
மறவா திருசிவமா வை. 135

ஏற்றா தவையாய் இருப்பதுவும் உள்மயக்கம்
ஆற்றாது தீரென் றரற்றுவதும் - தோற்றாது
தோற்றுவதும் உன்னைச் சுகபூ ரணனென்று
தோற்றுவதும் ஈசன் செயல். 136

அன்றே அரனணுக்கள் பாசங்கள் ஐந்தொழில்கள்
நன்றே சிவனும் நடுவனே - சென்றருளில்
நிற்கச் சிலர்சிலர்கள் நீள்நரகில் பூதலத்தில்
சொற்கத் திருப்பதென்னோ சொல். 137

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் - சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய். 138

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம் - நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். 139

சிவபோகசாரம் முற்றிற்று.

## 3. சொக்கநாதக் கலித்துறை

கண்ணுக் கினிய பொருளாகி யேஎன்
கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேஎன்ன
விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண
வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க
நாயகனே. 1

ஆதாரம் இந்நிலத் துன்னையல் லால்எனக்
காருளரோ
மீதான மான வெளியினைக் காட்ட
விரைந்துடன்வந்
தோதாமல் ஓதி எனைவச மாக்கினை
உள்ளொளியாம்
நாதா அருள்செய் மதுரா புரிச்சொக்க
நாயகனே. 2

கல்லது நெஞ்சம்; இரும்பே யிருசெவி;
கண்கள்மரம்;
சொல்லுவ தும்பொய்; அவமேதொழில், துக்க
சாகரமாம்;

அல்லலென் பங்குநின் அன்பர்பங் கானந்த
மாகவைத்தாய்;
நல்லது ! நல்ல மதுரா புரிச்சொக்க
நாயகனே. 3

பாடும் படிசெய் நினைந்நினைந் தேத்திப்
பணிந்தெழுந்தே
ஆடும் படிசெய்; மலம்ஐந்து மேஅடி
யேன்உளத்தே
வீடும் படிசெய்; நின் ஆனந்த சாகரம்
மேல்எனவே
நாடும் படிசெய்; மதுரா புரிச்சொக்க
நாயகனே. 4

ஏறாத விண்ணப்பங் கூறாநின் றேன்அஃ
தேதெனிற்கேள்;
மாறாமல் இந்த மகாலிங்கத் தன்னின்
மகிழ்ந்திருந்தே
ஆறாப் பவத்துயர் ஆற்றிச் சிவானந்தம்
அன்பர்க்கென்றும்
பேறாக நல்குதி; மாமது ராபுரிப்
பிஞ்ஞகனே. 5

ஆகம், கரணம், புவனங்கள், போகங்கள் ஆன
எல்லாம்
மோகம் பொருந்தவைத் தாட்டுதி யேல்மும்
மலாதியெல்லாம்
போக விடுத்தெனக் கானந்தம் காட்டப்
பொறிஉனக்கே
நாகம் அசைக்கும் மதுரா புரிச்சொக்க
நாயகனே. 6

ஆடாமல் ஆடிப் புலன் வழி யிற்போய்
அனுதினமும்
வாடாமல், வாடி மயங்கினின் றேன்மன
வாக்கிறந்து
கூடாமற் கூடிச் சிவானந்த வெள்ளக்
குணக்கடலை
நாடாமல் நாட அருள்; கூடல் வாழ்சொக்க
நாயகனே. 7

பொய்யாம் மலமறுத் தென்னுளத் தானந்த
பூரணத்தை
மெய்யா அளித்து விடாதிகண் டாய்; விடி
லோகெடுவேன்;
ஐயா! எனதுயி ரேவினை மார்க்கத்
தழுந்தி யென்றும்
றையா தருள்செய்; மதுரா புரிச்சொக்க
நாயகனே. 8

பிறவாத சென்மம் அழுந்தாத துன்பம்
பிறந்தடியேன்
இறவாத தானமும் உண்டுகொ லோஎளி
யேன்திரும்ப
அறவா இங் கென்னை இனி ஆட்டல் போதும்நின்
ஆனந்தத்தே;
நறவார் பொழில்மன் மதுரா புரிச்சொக்க
நாயகனே. 9

செய்யாத பாதகம் ஒன்றில்லை; ஒன்றொன்று
செய்ததெல்லாம்
ஐயா ! அளவில்லை; நீயே அறிவைஅஃ
தியார்செயலோ?

மெய்யப உயிர்க்குயி ரே அடி யேன்இவ்
வினையில்என்றும்
தையாமல் ஆள்வை; மதுரா புரிச்சொக்க
நாயகனே. 10

அறிவைத் திருப்பிநின் பாதார விந்தம்
அடையவல்ல
நெறியைக் கொடுத்து நிறுத்தினை யே நின்
மலாஇனிஎன்
பொறியைத் தவிர்த்துநின் ஆனந்த சாகர
பூரணத்தைப்
பிறிவற் றிருக்கவைப் பாய்எனை ஆண்டருள்
பிஞ்ஞகனே. 11

சொக்கநாதக் கலித்துறை முற்றிற்று.

## 4. ஞானப்பிரகாசமாலே

திருவார் கமலேயுள் ஞானப்ர காசன்
திருவடிக்கீழ்
வருவா ரவர்வழி வாரான் சமனும்
மலரயனும்
கருவாய் இடுவதற் கெண்ணான் எந்நாளும்
கருத்தினில்நீ
வெருவாய்; சுகத்தினில் வாழ்வாய்; பரானந்தம்
மேவிடுமே. 1

முற்றவஞ் செய்து மறந்தவர்க் கே அருள்
மூர்த்திகொளக்
கற்றவன், ஞானப் பிரகாச தேசன்
கமலேயில்வாழ்
வுற்றவன் முன்சென் றுயிர்ப்பாச நீக்கிக்கொண்
டுண்மைநிலே
பெற்றவர்க் குண்டு; பெருதவர்க் கேயிலே
பேரின்பமே. 2

சிற்பர நாதன், கமலேயுள் ஞானப்ர
காசசிவன்
அற்புத முத்திக் கொடிகட்டி ஞன் அல
மந்துழன்று

பிற்படுவீர்; கெடுவீர்; பிறர் கூறும்
பிரட்டைவிட்டு
முற்பட வோடி யவன்பாத பங்கய
முன்னில்லுமே. 3

முத்தன், அனாதி யுயிர்க்குயி ரானவன்,
முத்தசித்த
சுத்தன் அகண்ட பரிபூ ரணத்தன்,
சுருதிக்கெட்டா
நித்தன், கருணைத் திருவுரு வானவன்
நின்மலத்தன்,
அத்தன், கமலையுள் ஞானப்ர காசன்என்
ஆண்டவனே. 4

கடியார் பொழிற்செறி ஆரூரன், ஞானப்ர
காசன், முத்திக்
கொடிஆள் பவன்அன்பர்க் கின்பே யளிப்பவன்,
கூறவொண்ணாப்
படியான ஆனந்த மேயுரு வானவன்,
பாரில்நம்பா
அடியா ரினங்கண் டறியா தவன்என்னை
ஆண்டவனே. 5

ஒருத்தனை, யெண்ணில் உயிர்க்குயி ரானை,
உணர்வுக்கெட்டாக்
கருத்தனை, ஞானப் பிரகா சனைக், கம
லாலயனை,
நிருத்தனை, யன்பர் நினைத்ததெல் லாந்தரும்
நித்தனைச்,சற்
குருத்தனை யீசன்என் றெண்ணார் நரகிற்
குடிமக்களே- 6

வல்லான் கமலையுள் ஞானப்ர காசன்,
வசனமுணர்ந்
தெல்லாம் வெறும்மித்தை யென்றுகண் டேன் இன்ப
வாரியுள்ளே
சொல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித்
தினந்தினமும்
நில்லாமல் நின்றுகொண் டேன் இது வேமுத்தி
நிச்சயமே. 7

காரே சுமந்த கிரிமீது நின்று
கடுங்கனலில்
நேரே அருந்தவஞ் செய்வீர், கமலையன்
நெஞ்சிலன்பர்
ஆரேனு மாள்பவன் ஞானப்ர காசன்
அடியரெனும்
பேரே படைமின் அதுபோதும் போதும்
பிறப்பறவே. 8

எல்லாம்உனது செயலென் றறிந்தும்
எனதுளத்தில்
பொல்லாத சங்கற்ப மேன்வரு மோபுர
முன்றெரித்த
வல்லாய், கமலையுள் ஞானப்ர காச
மகிப,விது
சொல்லாய்; கரண மயக்கமன் றோவென்
தொழிலல்லவே. 9

அப்பார் கமலையுள் ஞானப்ர காசநீ
ஆண்டதனை
இப்பார் அகிலாண்டம் எல்லாம் அறிந்தன
யான்அறியேன்

தப்பா துரைத்தனன் முப்பாசம் என்னைத்
தடுத்ததென்றால்
செப்பார் உனைச்சிவம் என்னா உலகில்
சிரிப்பரன்றே. 10

நீயே துணையன்றி வேறில்லை! யென்பதை
நின்னருளும்,
நாயேன் மனமுந் திரமா யறியும்,எந்
நாட்டிலுநான்
போயே திரியினும், ஞானப்ர காச,நின்
பொன்மலர்த்தாள்
பேயேன் மறப்பதுண் டோஇனி மேலும்
பிறக்கினுமே. 11

ஆரார் பகைக்கினும், ஆரார் நகைக்கினும்
ஆவதென்ன
சீரார் கமலையுள் ஞானப்ர காசன்என்
சிந்தையுள்ளே
பேரா திருந்து சிவானு பவந்தரப்
பெற்றதினால்
வாராது சென்மமும் போகாது பேரின்ப
வாரியுமே. 12

எள்ளத் தனையன்பு நேராகச் செய்பவர்க்
கின்பசுக
வெள்ளத் தழுத்திய ஞானப்ர காசன்
விரைமலர்த்தாள்
உள்ளத்தில் ஒன்றும் புறம்பொன்று மாக
யுரைக்கும் அன்பில்
கள்ளத் தவருக்கு இரங்கா தளிக்கும்
கடைப்பிறப்பே. 13

தந்தையும், தாயும், தமர்களும், போகமும்,
 தாரணியும்,
எந்தையும், எந்தம் உயிர்க்குயி ரானும்.
 இரவினுக்கே
சந்தையும் பெற்ற கமலா லயனும்,
 தனுவும்என்றன்
சிந்தையும் ஞானப் பிரகாச தேசன்
 திருவடியே. 14

தாயே, கமலையுள் ஞானப்ர காச,நின்
 தன்னிடத்து
நாயேன் உளத்தன் பொருசற்று மில்லை; நல்
 லோர்கள்முன்னே
நீயே துணையென்றும் நின்னடியான் என்றும்
 நின்பெயரும்
பேயேன் தினஞ்சொல் பிழைபொறுத் தாள்வை
 பெருமையனே. 15

தேவே, கமலையுள் ஞானப்ர காச,நின்
 சேவடிகள்
ஆவேன் எனைத்தடுத் தாட்கொண்டும் ஆள்கிலை;
 ஆகையினால்
சாவேன் எனத்துணிந் தாற்சிரிப் பாருனைத்
 தாரணியிற்
கோவே, இதுவறிந் தாள்வாய்மெய்ஞ் ஞான
 குருபரனே. 16

சுரும்பார் கமலையுள் ஞானப்ர காசனைச்
 சுத்தனை, நற்
கரும்பார் மொழியனைக், கற்சண்டைத், தேனைக்,கண்
 ணாரமுதைப்,

பொரும்பாச மன்பர்க் கறுப்பானை, நன்னிலைப்
பூரணனை
விரும்பா திரா நெஞ்ச மேயெந்த நாளும்
விரும்புவையே. 17

துன்பார் பிறப்பற வீடுறு வோர்க்கொன்று
சொல்லுகிறோம்
வன்பார் உபாயக் களவின்றி யேமன
வாக்குமொத்திட்
டின்பார் கமலையுள் ஞானப்ர காச
னிடத்தில்வைத்த
அன்பால் விளையும் பரிபூ ரணசுக
மானதுவே. 18

கவுளிய மார்க்கங் கலந்தழித் தோன்கம
லாலயத்தோன்,
இவுளி நரித்திர ளாக்கிவைத் தோன்இசைப்
பாணனுக்குப்
பவுளி யுரைத்தருள் ஞானப்ர காசன்
பயின்மடத்தில்
கெவுளி உரைக்கும் பதிபசு பாசத்தின்
கேள்விகளே. 19

இத்தனை காலங்கள் என்றறி வாரில்லை
என்னையுநீ
முத்தன் எனும்படி யாகத் துணிந்ததும்
முன்னவ,நீ
சித்தம தென்னவெல் லாம்வல்லன் என்றுனைச்
செப்புவரென்
அத்தன் சமலையுள் ஞானப்ர காச,
அருள்புரியே. 20

தாயே கொலவெண்ணில் ஆர்காப்பர், சேயினைச்
சற்குருவாம்
நீயே பராமுக மாயிருந் தால்நிட்டை
யேயுரைக்கும்
வாயேது? ஞானப் பிரகாச உன்றன்
மலர்ப்பதத்தை
நாயேன் சிரத்தணி வித்தாள் கமலையுள்
நாயகனே. 21

மாதா பிதா, குரு, தெய்வந் துணையென்பர்
மக்குட்குன்றன்
பாதார விந்தம் அடியேற்கந் நான்கெனப்
பற்றிடென்றே
போதார் கமலையுள் ஞானப் ரகாச
புகன்றுமென்பால்
நீதான் பராமுக மானால் உரைப்பதென்
நின்மலனே. 22

படியார் கமலையுள் ஞானப்ர காச
பரமவென்றுங்
கடிதாய் வயிற்றினி லேயுற லோஇனிக்
காயமுற
முடியாது நின் இன்ப பூரண சாகரம்
மூழ்கியுன்றன்
அடியார்க் கடியன் எனவே திரிய
அளித்தருளே. 23

விதம்பர லோகன் கமலா லயத்துள்
விமலன் இன்பச்
சிதம்பர நாதன் கமலபொற் பாதன்என்
சிந்தையுள்ளே

இதம்பர மாகிய ஞானப்ர காசன் எல்
லாமும்வல்லோன்
பதம்பர மானந்த வீடே கொடுக்கும்
பணிந்தவர்க்கே. 24

செத்திப் படுத்தித் தெளிவாக்கிச் செந்நெல்
தெளிப்பதுபோல்
புத்திக் கடினங் கரை த்தமன் னேஇன்ப
பூரணத்தைச்
சத்திக்கு மேலினைக் கீழினை மும்மலத்
தன்மைதனைத்
தித்திக்கச் சொன்னது ஞானப்ர காசன்
திருவுளமே. 25

அமல பதியைக், கருணா லயனை,
யருளுருவாய்க்
கமலை வருகுரு ஞானப்ர காசனைக்,
காசினிக்கே
சமல மலமற ஆனந்த சாகரம்
சாரநல்ல
விமல மலர்கொண் டருச்சித்தன் போடென்றும்
வீழ்ந்திறைஞ்சே. 26

ஞானப்ர காசன் கமலையின் வாழ்குரு
நாதன்சொன்ன
மோனப்ர காசத்தைக் கேட்டவன் றேநெடு
மூச்சலைவற்
றூனப்ர காசச் செயலற்றென் உள்ளம்
உருக்கிஎன்றும்
வானப்ர காசத்து நேயத்தி லெசென்று
மண்டியதே. 27

பாசங் கெடுத்துப் பசுத்துவம் போக்கிப்
　　பராபரத்தில்
நேசங் கொடுத்து நிறுத்தின னே, நீண்ட
　　தோர்கயிலை
வாசன் செழுமதி மானும் மழுவும்
　　மறைத்துவந்த
நேசன் கமலையுள் ஞானப்ர காசன்நந்
　　தேசிகனே. 28

கிடந்தாலும் ஞானப்ர காசனென் பேன்கிடந்
　　தேஎழுந்து
படர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்பசி
　　யோடுபிணி
அடர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்அந்த
　　அந்தகனுர்
தொடர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்பின்னைச்
　　சொல் இல்லையே. 29

பொன்பதி ஞயிர மாற்றுள்ள மாலையும்
　　புல்லுங்கல்லும்
என்பும் இறகுந் தரித்தது போல்இனி
　　தாயவுள்ளத்
தன்பர் உரையையும் ஆரூர, என்னுடை
　　அன்பில் சொல்லும்
இன்புடன் கேட்டருள் ஞானப்ர காச
　　எழிற்குருவே. 30

தருராச ராசன் றுணைவனெந் நாளுஞ்
　　சகத்திலன்பால்
வருராசர் பொன்முடி தீண்டும் பதாம்புயன்
　　வஞ்சமலக்

கருராசி தீர்க்குங் கமலேசன் ஞானப்ர
காசனென்னுங்
குருராசன் சந்நிதிக் கேமன மேயென்று
கூடுவதே. 31

வான்கண் டுளங்களி கூர்மஞ்ஞை போலுன்
மலர்ப்பதத்தை
நான்கண் டுளங்களி கூர்வதெந் நாள்நளி
னாலயத்துள்
தேன்கண் டுளங்களி கூர்கம லேச
தினமுனிவர்
தான்கண் டுளங்களி ஞானப்ர காச
தயாநிதியே. 32

தேனே கமலையுண் ஞானப்ர காச
தேசிகநீ
தானே கமல பதஞ்சூட்டி யாண்டனை
யான்றனித்தே
வானே யெழுமதி காணுஞ் சகோர
மனம்துபோல்
ஆனேனின் சந்நிதி யெப்போதுங் காண
வருள்புரியே. 33

கருவாச லிற்புலக் கள்வர்தம் வாசலிற்
கட்டரையன்
பெருவாச லின்மற்றைப் பேதையர் வாசலும்
பின்செல்வரோ
மருவாசம் வீசும் மதுரேசன் சம்பந்தன்
வாழ்மடத்தின்
திருவாச லிற்செல்லுஞ் செல்வர்தம் வாசலிற்
செல்பவரே. 34

பெருவே தனையுறுங் காயத்தை நீக்கியுன்
பின்றொடர்ந்து
வருவே னதனையு மாற்றினை யேயந்த
வாக்குக்கஞ்சித்
திரிவேன் கமலையுண் ஞானப்ர காச
சிதம்பரசற்
குருவே யுனைப்பிரிந் தின்னா ளிருக்கவுங்
கூட்டியதே. 35

வரந்தரு பாதமென் சென்னியிற் றோய்ந்திட
வைத்தெடுத்தான்
பரந்திரு கண்ணினைத் தன்னினிற் காட்சி
பதித்துவைத்தான்
உரந்தனில் வைப்பதென் முன்னின்ப சாகரத்
துள்ளழுத்திப்
புரந்தனன் கூடலில் வாழ்ஞான சம்பந்த
போதகனே. 36

ஞானப்பிரகாசமாலை முற்றிற்று.

## 5. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்

### 1. பாச தசகாரியம்

பதிபசு பாசத் தொகுதச காரியம்
விதிபெற வுரைப்பன் விரும்பிக் கேண்மின்!
பாச சுபாவம், பாச வியாத்தி,
பாச வியாபகம், பாசத் தின்குணம்,
பாச விசேடம், பாச ரூபகம், 5
பாச ரூபம், பாச சொரூபம்,
பாச தெரிசனம், பாச சுத்தியென்
றாகி யொருபது வகைவிரி யறிமின்!
நீடு சுபாவம் நிறைவறி வின்மை.
நாடு வியாத்தி நவிலா ணவமலம் 10
மாயை காமியம் மாமாயை திரோத
மேய வைவகை வியாபகம் உரைக்கில்
ஆணவம் ஒன்று யனேத்துயி ரிடத்துங்
காணு வியாத்தியாய்க் கலந்து நிற்கும்.
மாயை ஒன்ருய் வடிவற நிற்க 15
வாய தனுமுத லாகியு நிற்கும்.
கன்ம மொன்ருய்க் காசற நிற்கப்
பண்ணிய சஞ்சித பாவ புண்ணியம்
பொருந்திய பிராரத்த புண்ணிய பாவம்
விருப்பிய நால்வகை விளங்கியு நிற்கும். 20

ஒப்பின் மாமாயை யொன்ருய் நிற்கத்
தப்பறு சுத்த தத்துவ மாகியும்
சகல சாத்திரந் தானுமாய் நிற்கும்.
இகலறு திரோதம் இருக்க வொன்ருய்
மருவு முயிரினை மறைப்பித்து நிற்கும். 25
திருந்திய குணம்அது சடமாயிருக்கை.
விசேடம் அதுதான் மெய்ச்சட மாகிலும்
விசேட மாகிய வினைசெயப் படுதல்.
இகலறு ரூபகம் இத்தன்மை யெல்லாம்
பலவற வொன்ருய்ப் பரந்து நிற்கும். 30
பாச முளவெனப் பற்றி நிற்றல்
ஆசறு ரூபம் அதுதா னடுத்துத்
தேக வடிவாய்த் திகைப்புற நிற்கை
வாகை சொரூபம் மன்னுயிர் தனக்கு
வடிவிற் காளிதம் மன்னுதல் போலச் 35
சடமது வாகிலுந் தான்மறைப் பிக்கும்.
உடலிற் கொண்ட வுருவிடம் போல
மடமை நனியாய் மயக்கு விக்கும்.
தவிராத் தண்ட ந் தானது போல
உயராப் பொசிப்பா யூட்டுபு வருத்தும். 40
தேரிற் பாகன் செலுத்துதல் போலப்
பேரா நின்று பிரேரிப் பிக்கும்.
இருளுக் கிருள்போ லெங்கு மொக்கப்
பிரிவற நிற்கும். பேரந்த காரம்
ஆகியு நிற்கும். ஆசறு தெரிசனம் 45
பாகற நின்று படுமுயிர் பொய்கை
மிச்சை யென்று வினவா தன்றி
நிச்சய மாக நீள்வடி வறியாப்
பிரமந் தானே பிறிதிலை யென்றும்
அருளைச் சிவனை யறியா தாகி 50

யிதமு மகிதமு மினிதுற வயின்று
சிதமற நிற்குந் தெரிசன மிதுவே.
சுத்தி யாவது தொல்லை யிறைனையயும்
நித்த பாசமும் நேர்பணி யில்லை
யென்னு மதுவு மிவையுயி ரல்ல 55
மன்னுயிர் வேறென மதிப்பது கடனே.

## 2. ஆன்ம தசகாரியம்

ஆன்ம சுபாவம், ஆன்ம வியாத்தி,
ஆன்ம வியாபகம், ஆன்மா வின்குணம்,
ஆன்ம விசேடம், ஆன்ம ரூபகம்,
ஆன்மரூபம், ஆன்ம சொரூபம்
ஆன்ம தெரிசனம், ஆன்ம சுத்தி, 5
ஆன்ம லாபம், ஆயவை பன்னொன்(று)
ஆத்தும சுபாவம் அனவர தமுமே
சாற்று தத்துவம் தானாய்க் கூடுதல்.
வியாத்தி தத்துவ அவாவுள் ளளவும்
வியாத்த மாகி விடயத் திருத்தல் 10
வியாபகம் தத்துவ மிக்குள் ளளவும்
வியாபகம் தானாய் மேவிடு முயிரே.
குணமும் மடமாங் கோதில் விசேடம்
குணமறி யாமை குறுகி யிருக்க
இருண்மல பக்குவம் எய்திய போதில் 15
அருளிறை யுணர்த்த வறிவாய் விடுதல்.
உற்ற ரூபகம் உடம்பே யொழிய
மற்றுயி ருண்டென வாய்மை பொருந்துதல்.
உருப மிச்சை யுயர் ஞா னந்தொழில்
சொரூப மாகித் துணியுற் றிருத்தல். 20
இச்சை பதார்த்த மிராக மாத்தன்

நிச்சய ஞானம் நிகழ்பண் டங்களில்
பகுத்தறி வாகை பகருங் கிரியை
மிகுந்த பதார்த்த மிகவப கரிக்கை.
சொரூபம் மெய்போற் ரேன்று தேகாதி 25
உருவ மிந்திர வுயர்தனுப் போலும்
பொய்யென வுணர்த்தப் பொருந்துதல் தானே.
மெய்யுயிர்த் தெரிசனம் விரிவறி வாகை.
சுத்தி யுரைக்கிற் ரெழிலறி விச்சை
மத்த வுணர்வும் மட்டற விட்டே 30
யுணர்வு மசைவு மொன்றற நிற்றல்
புணர்வி லாபம் புகலுங் காலை
நிரஞ்சன மாகி நின்றவ தரத்தில்
உரமற விளைந்த வுயரா னந்த
போகம் புணர்ந்து பொருந்துத ருனென 35
ஆகம மெல்லா மறைந்தன மாதோ.

## 3. சிவ தசகாரியம்

சிவசு பாவம், சிவவி யாத்தி,
சிவவி யாபகம், சிவத்தின் றன்குணம்,
சிவவி சேடம், சிவவு ருபகம்,
சிவவு ரூபம், சிவ சொரூபம்,
சிவ தெரிசனஞ், சிவவி யோகம். 5
சிவனது போகந் தெரித்தபன் னென்றில்
சுபாவம் தத்துவத் துரிசற நிற்கை
விபாவ வியாத்தி விரிபுவ னத்திலும்
சகல வுயிரிலுந் தடையற நிற்கை.
இகலறு வியாபகம் எங்கும் நிறைந்தே 10
விமல நிராமய மேவிய நிலையில்
தமதி லிரண் டறத் தங்கி யடங்கிய
உயிரீ டேற்று முபாயகா ரணமாய்ப்
பயிறிரு மேனி படிமிசைக் கோடல்.
குணம்எந் நாளுங் குன்ரு வறிவாம். 15

புணரும் விசேடம் பொருந்த வுரைக்கில்
அறிவுக் கறிவு மன்றி யசேதனம்
பிறிவறத் தொழிற் செயல் பெற்றியுண் டாக்குகை.
தீதறு ரூபகம் திகழறி வுக்குக்
கோதறு முயிராய்க் கூடா நிற்பன் 20
பரம மாகிய பரனெனத் தோன்றுதல்.
விரியும் உருபம் விளங்கப் புகலில்
இச்சா ஞான மிருந்தொழி லான
நிச்சய ரூபமாய் நிலைபெற நிற்கை.
இச்சை யுயிர்களை யிரட்சிப் பதுவாய் 25
மிச்சையி லாசை விரிவது தானே
ஞான மகில ஞால முயிர்கள்
யானங் கைக்கனி மதித்தன மான
ஒருகா லத்தி லுணர்ந்தே யிருத்தல்
கிரியா சத்தி கிளருயிர் களையும் 30
தேகமிந் தியங்கள் திகழ்வுறக் கூட்டிப்
போககன் மங்களைப் பொசிப்பித்து நிற்கும்.
சொருபம் ஒன்றெடுந் தோயா திருத்தல்
இலகரு தெரிசனம் எழினிரு விகற்பம்
எங்கும் பூரண வெழிலுற நின்ற 35
சங்கமில் வடிவைத் தானறக் காண்கை.
யோகம் செப்பி லுயரா னந்த
யோக மாக வொழிவறத் தோன்றல்.
போகம் உன்னைப் புகன்ற விலாபம்
ஆக வாகம மறைந்த திதுவெனத்
தேசிக சிகாமணி தென்கமலாபுரி
நாசமில் சீர்த்தி ஞானப் பிரகாசன்
அருளிய அட்ட வணையி னடைவே
பெரிதும் பயனுறப் பேசின னறியே.

திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் முற்றிற்று.

## 6. சோடசகலாப்பிராசாதசட்கம்

### கலைகளின் வன்னமும் தானமும் கூறியது

நற்றழலின் கொழுந்துபய கதிர்மின்னு விளக்கு
நண்ணும்வா ளொளிபுகைமா ணிக்கமிரு மின்னு
உற்றொளிரு மிரவிநூறா யிரகோடி யுதய
ஒளியன்ன தொகைவட்ட ஞானா காயம்
அற்றமில்ஞா னவ்வாழி ஞானக்கண் ணாடி
அவிர்நூறா யிரகோடி மதியொளியத் தொகையே
பெற்றதின கரவெயில்மேற் பேசவரு மிருளே
பிறங்குந்தி முதல்முடிமேற் றுவாதசாந்தம்பெறுமே. 1

### மேல் சோடசகலைக்கு நாபிமுதலாகத் துவாதசாந்தம் அளவாக அளவுந் தானமும் சொல்லியது

அங்குலநா லகரத்திற் குந்தி மீதே
அடுத்திடுமுன் றிற்கெட்டெட் டாயே நிற்குந்
துங்கமுள நாலினுக்கு மூன்று மூன்றாந்
துலங்கியவோ ரிரண்டினுக்கு நான்கு நான்காந்
தங்கியமே லொன்றுக்கு மூன்றே யாகுந்
தயங்கியமே லொன்றுக்கொன் றாகச் சாற்றும்
பங்கமிலா விவைகள்துவா தசாந்த மாகப்
பாங்குபெறு கலை களெனப் பகரு நூலே. 2

## மேல் அகர முதலான சோடச கலைக்கு வடிவு சொல்லியது

அகரமுக ரம்மகரம் விந்து நல்ல
அர்த்தசந் திரனிவையவ் வடிவே யாகும்
புகலவரு முக்கோண மிருவிந்து நடுவே
பொருந்துமலம் விந்துவலம் நடுவே விந்து
தகவுடைய திரிசூல மிரண்டு விந்து
சாரும்வியோ மாதிநால் விந்து நான்காய்
நிகழவரு மிருகுச்சி யிரண்டு விந்து
நீடுமொரு விந்துவென நிறுத்து நாலே, 3

## மேல் பதினாறு கலைகளுக்குந் தேவதை கூறியது

மலரயன்முன் னால்வர்களு மாகு முந்தி
மருவகர மாதியொரு நாலுக் கும்மேல்
இலகவரு நான்கினுக்குஞ் சதாசிவமே தெய்வம்
எழிலுடைய மேலிரண்டிற் காகதமாஞ் சிவமே
நலமுடைய நான்கினுக்கு நற்பரம சிவமே
நண்ணுமநா கதசிவமே நவிலரிய விரண்டிற்(கு)
உலகறிய வைந்துமுன் றிரண்டி ரண்டே
யுள்ளாகு மிரண்டிரண்டிற் கொருநான்கு தானே. 4

## மேல் ஆதார நிராதாரங்களுக்குங் கலைகளுக்கும் மலநிலை சொல்லியது

மூலத்தி லோங்கார மசபைக் காக
மொழிவர்கா மிகமலமேல் முகிழ்க்கு முந்தி
யேலத்தான் மேவகர முன்னி ரண்டிற்
கிமுக்குமல மேலிரண்டிற் கிலகு மாயை
சீலத்தான் மேலிரண்டிற் றிகழ்மா யேயத்
திறலுடைய மேலிரண்டிற் சேர்மா மாயை
சாலத்தான் மேலிரண்டிற் றகுதி ரோதந்
தயங்கியமே லிரண்டிற்கா ணவமே சாற்றில், 5

## மேல் ஆதார நிராதாரங்களிலுள்ள மலங்களுடனே எண்பத்து நான்கு நூருயிர யோனி பேதமும் சோதனைப்படும் என்கின்றது

அரியமூ லாதார மதனின் மேவி
யவிருமோங் காரமொழி லசபைக் காகத்
தெரிவரிய யோனிதா பரமே யாகுந்
திகழ்வரு முந்தியின்மே லகர மாதிப்
பிரிவரிய விவ்விரண்டா யறுகூ றாகிப்
பெறும்யோனி யூர்வனவு நீரில் வாழ்தற்(கு)
உரியனவும் பறவைகளு நாற்கான்மா னிடரும்
உயர்தெய்வ கதியுமென வுரைக்கு நூலே. 6

## மேல் எல்லாக் கலைகளுக்கும் மாத்திரையுஞ் சட்சூனியமும் கூறியது

மூன்றகர மிரண்டுகர மகர மொன்றே
முந்துவிந்து வரைபிறைகால் முக்கோண மரைக்கால்
ஆன்றமைந்த நாதமா காணிநா தாந்தம்
அரைமாமே லரைக்காணி சத்தியைமுந் திரியை
யேன்றவியா பினியரைக்கா ணியின்கீ ழினரையே
யிம்முறை வியோமாதி யரையரைமாத் திரையே
தோன்றுமக ரத்தின்மே னிரோதசத்தி யின்மேல்
தோற்றும்வியா பினிசமனை யுன்மனைமேற் சுன்னே. 7

சோடசகலாப் பிராசாத சட்கம் முற்றிற்று.

## 7. முத்திநிச்சயம்

சீர்மேவும் அரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன் - தார்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்
றாவ தெனமொழிவேன் யான். 1

சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர் - முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம். 2

அந்நிலையா னும்பிறவு மான்மாநந் தத்திறமாம்
என்னிலையே சித்திக்கு மென்றியம்பில் - உன்னிலைதான்
இல்லதென வேநீ யியம்பு மளவைமுதல்
சொல்லுமது கேளாய் துணிந்து. 3

ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனால்
ஆசறத்தன் சத்தியிலின் பான்மாவு - நேச
முடனருந்து மென்னின்முத்தி யொவ்வாது பாசம்
விடஅ துவாய் நிற்பதுவா மே. 4

சிற்றின்பம் பேரின்பஞ் சீவகுண மென்றனை நீ
உற்றின் பிரண்டு முணர்ந்திலையோ - சிற்றின்பம்
நாடிற் கருமபல நாதனுருப் பேரின்பம்
நீடிப்ப டிகம்போல் நீ. 5

பெறுவானும் பேறுநான் பெம்மானுள் ளுண்டேல்
அறிவாயோ வாநந்த மன்றி - யறிவேனுன்
ஆநந்தங் காட்டி யகத்திருப்ப னுகிலது
மானந்தான் கண்டறியாய் மற்று. 6

வேதாக மத்தின் விதித்தமுத்தி தாளன்றி
நீதானே யின்பமென்றல் நீதியோ - பேதாய்
பெறுவானீ யாநந்தம் பேறென் றுரைத்த
தறியா திருந்தனே நீ யாம். 7

உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்
தன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே - முன்னறிஞர்
ஓதுசிவன் தோற்ற மொன்றுமே காண்பரெனும்
போத மறந்தனேயிப் போது. 8

ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெலாம்
மோசமாய் வந்து முடிந்ததே - பாச
வினையகன்ற போதும் விமலனே நின்றுள்
தனையறியா மூடர்க்குத் தான். 9

தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா நந்தனைநீ
யானென் குணமென் னிடும்பென்னே - ஊனநீ
ஞானகுணம் பெற்றின்னு நானு னென நவிலும்
ஈனகுணம் போனநிலை யே. 10

தோன்றுபர மாநந்தச் சோதியன்றி நின்னறிவில்
தோன்றுசுக முண்டென்றுய் சுத்தப்பொய் - தோன்று
ஈச னுயிர றிவ தீதன்றி வேறுண்டேல் [இன்பம்
பாசமலா தேதுண்டு பார். 11

அண்ணலைப்போ லாநந்த மான்மாவிற் குண்டாகில்
எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ - கண்ணிருளை
ஓட்டாதோ ஆதவனுக் கொத்தவொளி யுண்டாகிற்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள். 12

ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமென் பேதாய்கேள் - பேரின்பம்
நின்குணம்போல் தோன்றுமது நீயாகை யான்இரும்பு
தன்குணமோ தீயியல்பு தான். 13

ஆசகற்றி நின்னறிவி லாநந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி யுன்றன் குணமென்று - பேசியிடும்
பேயாவா திக்கேது பேசிடில்நீ தானந்த
மாயாவா திக்கே மகன். 14

என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ போகமெனச் சொல்லாமல் - உன்றன்
நலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயு
மலம்போக முத்தியென்ப வன். 15

தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்
இன்ப முயிர்க் குண்டென் றியம்பியதேல் - இன்பஞ்சி
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம். 16

சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் - சிவசத்தி
தன்னைப் புணர்ந்ததன்று சாற்றுவமை யுந்தெரியார்
தன்னைமுலைப் பாலென் றறி. 17

சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் - சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளால் சச்சிதா நந்தமெனு
மன்னைத் திளைத்துவாழ் வார். 18

அன்றியுயிர் சற்சித்தே யாநந்த மில்லையதற்
கென்றுபல வாற்றானு மெய்துவிக்க - நின்ற
முறையாலு மீசனொடு முற்றுஞ் சமதை
யறையாமை கூறியது மாம். 19

ஆநந்த மின்றி யரன் சமதை முத்தியெனிற்
றானந்த வேதா கமஞ்சாற்றா - ஊனம்
படுமே தசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயொன் றாமெனலுங் கேள், 20

சிவசமமே முத்தியெனிற் சித்தாந்த மன்றாம்
சிவசமய பேதமெனச் செப்பும் - அவைகளிலே
யொன்றென்பர் வேறெனினு மோரேக தேசமதம்
அன்றெனின்மற் றோற்கும் அது. 21

உள்ள மலநீங்கி யோங்கு சிவாநந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே - கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு. 22

முத்திநிச்சயம் முற்றிற்று.

# 8. நவரத்தினமாலை

மாயப் பிரபஞ்ச வாழ்க்கை பொய்யென்று மனத்திலுற்றுக்
காயத்தை நீக்கிப் பரிபூர ணத்தினைக் கைக்கொடென்னைத்
தேயத் திடைக்கிடந் துழலச் செய்தனை தீங்குபெற
ஞாயத்தை யெற்கருள் ஞானப்ர காச நவமணியே. 1

பிறவி யெனுங்கடல் நீந்திக் கரையிற் பெறும்பயனை
நிறைவுகொண் டாயடி யேனையும் தீக்கினை நின்னருளால்
உறைகின் றனனெனை வாவென் றழைக்கு முபாயமதை
அறைவை நீயெற்கு ஞானப்ர காச வருள்மணியே.

ஆடற் குரியநற் சொக்கலிங் கேச னவரருளால்
கூடற் குநின்னயஞ் செய்தன இன்றுகூ டாதொழிந்தாய்
வாடற் கெனைவிடச் சொற்றில னீயொரு வார்த்தை
[சொல்லாய்
தேடற் கரிய ஞானப் பிரகாச சிகாமணியே. 3

குடிகொண்ட யாக்கையை நிலையென் றெண்ணிக்
[குவலயம்விட்
டடியேன் றனைமறந் தானந்தம் புக்கி யருள்வெளியாய்
படியெங் குநீக்க மறநிறை கின்றநின் பாலொளிசேர்
அடியேற் கருள்குரு ஞானப்ர காச மகிழ்மணியே. 4

யோக நிலைமீதி னிற்கின் றதோயுல கத்தினைவிட்
டாக நிலையுயிர் நீக்கினை யோயடி யேன்றனைவிட்
டேக நிலையினைப் பற்றினை யோவெளி யேன்றனக்குச்
சோக நிலைதவிர் ஞானப்ர காச வுயிர்மணியே. 5

தருமையி லாங்குநன் சம்பந்த னென்றுநீ சாற்றுமொரு
பெருமையைமாற்றப்பிரிந்தனை யோநற்பெருந்தவத்தோர்க்
குரிமை யதுவென்று யெத்தனை கால முழன்றலைவேன்
அருமையு மாகிய ஞானப்ர காச வருள்மணியே. 6

குருவாரந்தோறுமே வந்துனைப் போற்றவுங் கூறியசொற்
கருளே நின் காயத்தை நீக்கினை யேலடி யேன்றனக்கு
ஒருவா சகமின்றி யென்னைப் பிரிவ துனக்கழகோ
திருவா சகமுரை ஞானப்ர காச சிகாமணியே. 7

கனியே னெனதுளங்கன்னெஞ்சனென்றுகடைப்படுத்தித்
தனியாய்ப் பிரிந்ததின் காரண மோதமி யேனறியேன்
இனியா வதுபிழை நீதவிர்ந் தோர்சொலை யின்புறவும்
நினையாய் கமலையுண் ஞானப்ர காச நிதிமணியே. 8

பெருமெத் தனையுறுங் காயத்தைநீக்கியுன் பின்தொடர்ந்து
வருவே னதனையு மாற்றினை யேயதற் காக அஞ்சித்
திரிவேன் கமலையுள் ஞானப்ர காச சிதம்பரசற்
குருவே யுனைப்பிரிந் தின்னு ளிருக்கவுங் கூடியதே. 9

நவரத்தினமாலை முற்றிற்று.

## தனிப் பாடல்கள்

### சொக்கநாத வெண்பாவின் சில பிரதிகளில் காணப்படுவன

புண்டரிகத் தாளைப் புகழ்ந்து புகழ்ந்துதினம்
அண்டமரர் கொண்டிறைஞ்சும் ஆதியே - தொண்டுபடும்
நாயேனை ஆண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயேநீ சொக்கநா தா.

மிண்டுசெய்யு மும்மலமு மிக்கவினை நல்குரவும்
பண்டுபோ லென்னைவந்து பற்றுமல் - கொண்டுபோய்
நின்னருளிற் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே சொக்கநா தா.

கூரியவெம் பாசக் குளிர்நீங்க நின்னருளாஞ்
சூரியன் எப் போதுவந்து தோன்றுமோ - பாரறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர்கொள்ளையிட்ட மாமதுரை
இட்டமிட்ட சொக்கநா தா. 3

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீநர - மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா. 4

சன்மார்க்கஞ் செய்யுந் தபோதனரோ டென்னையுநீ
நன்மார்க்கஞ் செய்யருள் நாடுமோ - துன்மார்க்கஞ்
செய்கின்ற முப்புரத்தைத் தீயாக்கித் தென்மதுரை
வைகுகின்ற சொக்கநா தா. 5

வந்தபொருளாசை மண்ணாசை பெண்ணாசை
இந்தவகை யாசையெல்லாம் என்மனத்தின் - வந்துமினி
நேராமல் வாழ நினைகண்டாய் தென்கூடற்
பேராத சொக்கநா தா.

தண்டுவரும் குண்டுவரும் தானைவரும் ஆனைவரும்
வண்டில் வரும் ஆடுவரும் மாடுவரும் - மிண்டிப்
பெருங்கோட்டை யுஞ்சுமையும் பின்புவருங் கூடல்
அருங்கோட்டை வரசலிற்சென் றால். 7

## சிவபோகசாரத்தில் காணப்படுவன

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வி
[யல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்
[களே. 1

கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை கண்ட
[துண்டோ
எனக்கும்உடற்கும் எனதிச்சை யோஇணங்கார்புரத்தைச்
சினக்குங் கமலையுள் ஞானப்பிர காச சிதம்பரஇன்
றுனக்கிச்சை எப்படி அப்படி யாக உரைத்தருளே. 2

எல்லாம் உனது செயலென் றறிந்தும் எனதுளத்திற்
பொல்லாத சங்கற்பம் ஏன்வரு மோபுர முன்றெரிக்க
வல்லாய் கமலையின் ஞானப்ர காச வரதஇது
சொல்லாய் கரண மயக்கமன் றோஎன் தொழிலல்லவே. 3

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமைஉணர் வதுவே. 4

கதிவாழ்க வேதநல் ஆகமம் வாழ்கநற் கண்மணிஉன்
பதிவாழ்க சைவம் திருநீறும் கண்டியும் வாழ்கஅருட்
குருவாகும்நின்றன் திருக்கூட்டம் வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ் தருமைத் திருஞான சம்பந்த தேசிகனே. 5

## முத்திநிச்சயத்தின் சில மூலப் பிரதிகளில் காணப்படுவன

சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் - சிவசத்தி
சேரத் தனுவல்ல சிற்பரா நந்தவெள்ளம்
ஆரத் தெவிட்டா தது.

அகம்பிரம மென்னா தடாகெடுவாய் கேணீ
சுகம்பிரமம் பாசமுறா சொல்லின் - இகம்பரமு
நீயே சிவமல்ல நீகருட னாகையினால்
நீயே சிவலோகமென நில்.

நின்மலத்தை நீக்கி நினதுருவைத் தானாக்கு
நின்மலமா மானந்த நீயென்றாய் - நின்மலமாந்
தன்வடிவாய் நிற்பதுவோ சந்ததமு முத்தியிலே
யுன்வடிவாய் நிற்பதுவோ வோது.

இன்பமுயிர்க் குண்டென்ற தேதோ உபனிடத்தே
துன்பில் பிரமகீதை சொன்னதே - இன்பஞ்சீ
வான்மாவுக் குண்டென் றறைந்ததல வாகுபர
மான்மாவுக் குண்டென்ற தாம்.

ஆகங் கரண மறியாமை துக்கசுக
போக மவையணைந்த போதெல்லாம் - ஏகமாய்த்
தானவையாம் பான்மைபோல் தற்பரமா னந்தநீ
தானதுவாய் நிற்குந் தரம்.

முத்தி நிலையணுக்கள் சேர மொழிந்திட்டான்
சத்திய மெய்ஞ்ஞான சம்பந்தன் - முத்திதனை
ஈவா னுடன்பேறுங் கொள்வானும் எந்நாளும்
ஆவான் அனன்னியமென் றாய்ந்து.



உ

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

—⁕⁕⁕⁕—

பாட்டு முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.






உ
சிவமயம்

## " ஞானசம்பந்தம் "

## சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு !

---

தருமை ஆதீனத்திலிருந்து திங்கள்தோறும் மலர்ந்து செந்தமிழ்மணமும் சிவமணமும் பரப்பி, சிவஞானத்தேன் வழங்கிக் கற்போர்கருத்தை வளர்த்துவருவது " ஞானசம்பந்தம். " 58 ஆண்டுகள் நிறைவுபெற்றது. 59 ஆவது மலர் ஆண்டுக்கட்டணத்தை உடன் செலுத்தக் கேட்டுக் கொள்ளுகிறோம். சந்தாதாரர்கள் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும், புதிய சந்தாதாரர்களாகச் சேர விரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக்கட்டணம் அனுப்பியும் சந்தாதாரர்கள் சந்தாவை உரியகாலத்தில் செலுத்தியும் உதவிபுரிந்து உயர்வுபெறுவார்களாக.

| | | |
|---|---|---|
| ஆண்டு சந்தா உள்நாடு | ரூ. | 25---00 |
| ஆண்டு சந்தா சிலோன் உள்பட வெளிநாடு | ரூ. | 75---00 |
| ஆயுள் சந்தா உள்நாடு | ரூ. | 250---00 |
| ஆயுள் சந்தா சிலோன் உள்பட வெளிநாடு | ரூ. | 750---00 |
| தனிப்பிரதி விலை | ரூ. | 2---25 |

செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மயிலாடுதுறை 609 001
நாகை மாவட்டம்